குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 25] பராபவ ஆண்டு வைகாசித் திங்கள் 10—6—66 [இதழ் 7



தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

சுத்தநிலம் உன்றனக்குச்
சொல்லக்கேள்தொல்லைவினைத்
தத்துவங்கள் ஆறாறுந்
தாம்பெருகக்—கத்திடுவர்
எல்லாம் இழந்த
இடமே அதுவாக
நில்லாய் அதுவே
நிலை. (41)


ஆசிரியர் :-

வித்துவான்,

சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-

வித்துவான்,

சி. அருணைவடிவேல் முதலியார்.



உ

குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 25 || 10-6-66 || இதழ் 7


## உட்பொருள்







## அட்டைப் பட விளக்கம்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜை விழாவில் தருமை ஆதீனம் 25 ஆவது ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் கொலுக்காட்சி வழங்கும்போது வழிபாடு செய்தல்.

உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 25 ] பராபவ - வைகாசி - 10—6—66 [ இதழ் 7

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. (சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்




இறைவன் உயிர்கட்குச் செய்யும் நன்மைகள் இரண்டு. ஒன்று போகம்; மற்றொன்று மோட்சம். இவைகள் 'புத்தி, முத்தி' என்றும் சொல்லப்படும். 'மோட்சம், முத்தி' என்பவற்றிற்கு, 'விடுதலை' என்பது பொருள். அது, விடுதலை பெற்ற பின்னர் அடையும் இன்பத்தைக் குறிக்கின்றது. எனவே, 'போகம்' என்பது, கட்டுற்று நிற்கும் நிலையில் அடையப்படுவது என்பது புலனாகும்.

'போகம், புத்தி' என்பவற்றிற்கு, 'நுகர்ச்சி அல்லது அனுபவம்' என்பது பொருள். இன்ப நுகர்ச்சி மட்டும்

நுகர்ச்சியன்று; துன்ப நுகர்ச்சியும் நுகர்ச்சியே. அதனால், கட்டுற்ற நிலையில் இன்பம் மட்டும் இல்லை; துன்பமும் உளது என்றல் தோன்றும். மோட்சத்தில் துன்பத்திற்கு இடம் இல்லை; இன்பம் ஒன்றே உண்டு. இவற்றால், 'கட்டுற்று நிற்கும் நிலையில் உண்டாகின்ற இன்பம் சிறியது, அஃதாவது, துன்பத்தினால் அளவறுக்கப்படுவது' என்பதும், விடுதலை பெற்றுநிற்கும் நிலையில் உண்டாகின்ற இன்பம் பெரியது; அஃதாவது, 'மற்றொன்றினால் அளவறுக்கப்படாதது' என்பதும் விளங்கும். இவ்விருவகை இன்பத்தையும் தருபவன் இறைவனே. அதனால் அவனை, "பந்தமும் வீடும் படைப்போன்" (திருவாசகம்) என்றும், "பந்தம் வீடவை யாய பராபரன்" (பெரியபுராணம்) என்றும் பெரியோர் அருளிச்செய்கின்றனர். பந்தம் - கட்டு. வீடு - விடுதலை. ஆதலின், 'பந்தம் வீடு' என்பதை, 'கட்டு வீடு' எனவும் வழங்குவர். பந்தம், 'பெத்தம்' எனப்படுதலின், 'பெத்தம் முத்தி' என்னும் வழக்கும் உண்டு; இறைவன் உயிர்கட்குப் பந்தத்தைத் தருகின்றான் என்றால், கட்டுற்று நின்று அனுபவிக்கும் சிறிய இன்பத்தைத் தருகின்றான் என்பதே பொருள்.

இறைவன் உயிர்களுக்குப் பேரின்பம் ஒன்றையே தாராது, துன்பத்தோடு கூடிய சிற்றின்பத்தையும் தருவது ஏன் என்று வினவலாம். பேரின்பத்தைத் தருவது ஒன்றே இறைவனது திருவுள்ளம். ஆயினும், அதனை ஏற்றுக் கொள்ளும் பக்குவம் உயிர்கட்கு இன்மையால், அவைகள் அப் பக்குவத்தை அடையுங்காறும் சிற்றின்பத்தையே இறைவன் அவைகட்குத் தருகின்றான்.

உயிர்கட்குப் போகமோட்சங்களாகிய இருவகை இன்பங்களையும் தருதற்பொருட்டு இறைவன் பலவகை வடிவங்களைக் கொள்கின்றான். அவை அனைத்தும், 'போகவடிவம், யோகவடிவம், வேகவடிவம்' என்ற மூன்று வகையில் வைத்துச் சொல்லப்படும். போகவடிவம் போகத்தைத் தரும்; யோகவடிவம் மோட்சத்தைக் கொடுக்கும்; வேகவடிவம்

அவ்விரண்டிற்கும் தடையாய் வருகின்ற இடையூற்றை நீக்கும். இவ்வடிவங்கள் அவ்வப்பொழுது அளவிறந்த வகையில் கொள்ளப்படுமாயினும், முன்னே ஒவ்வொரு சமையத்தில் கொண்ட வடிவங்கள் சில உள; அவற்றை அறிந்து வழிபடுவோர், அப்பயன்களைப் பெறுவார்கள். அவ் வகையில் ஒருசமையம் நான்கு முனிவர்கட்கு உண்மை ஞானத்தைத் தருதற்பொருட்டுக் கொண்ட யோகவடிவமே தென்முகக் கடவுள் ( தட்சிணாமூர்த்தி ) வடிவம்.

நிலவுலகத்தில் இறைவன் விளங்கிநிற்கும் இடம் திருக் கைலை. அதன்கண், படைப்புக்காலத்திலே அத் திருமலை யின் தென்புறத்தில் கல்லாலமர நிழலில் தென்திசையை நோக்கி அமர்ந்து 'சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்' என்னும் முனிவர் நால்வர்க்கு நான்குவேதங்களை இறைவன் சொல்லியருளினான். நான்கு வேதங்களிலும் சொல்லப் பட்டவை, அறம் முதலிய நான்கு உறுதிப் பொருள்கள் ( புருடார்த்தங்கள் ). ஆதலின்,

" *அழிந்த சிந்தை அந்தணாளர்க் கறம்பொருள் இன்பம் வீடு*
*மொழிந்த வாயான் முக்கண் ஆதி மேயதுமுது குன்றே* "

( ஞா. ச. தேவாரம். )

" *அருந்தவருக் காலின்கீழ் அறம்முதலா நான்கினையும்*
*இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ;*
*அருந்தவருக் கறம்முதல்நான் கன்றருளிச் செய்திலனேல்,*
*திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ* "

( *திருவாசகம்* )

என்றாற்போல்வன, திருமுறைகளிற் சொல்லப்படுகின்றன இனி, பொருள் முதலிய மூன்றும் அறத்தின்கண் அடங்கு வன என்னும் கருத்தால், ' ஆலின்கீழ் அறம் உரைத்தான் ' என்றே கூறிப்போதலும் உண்டு. இஃது,

" *ஆலமர நீழல்அறம் சொன்னாய் போற்றி* "

( *திருத்தாண்டகம்* )

என்றாற்போல்வனவற்றால் அறியப்படும்.

வேதங்களைக் கேட்ட முனிவர்கள் நால்வரும் அதனைப் பலகால் சிந்தித்தும் தெளிவுண்டாகாமையால், மீண்டும் திருக்கைலையை அடைந்து இறைவனிடம் விண்ணப்பிக்க, இறைவன், முன்போலத் தென்முகக் கடவுளாய் அமர்ந்து சிவாகமங்களை அவர்களுக்கு உரைத்தருளியதோடு, தானே மோனநிலையில் இருந்து காட்டி அனுபவம்பெறச் செய்தனன் என்பது கந்த புராணத்துட் கூறப்படுகின்றது.

சிவபெருமான்பால் வேத சிவாகமங்களைக் கேட்டு மோனநிலையையும் உணர்ந்த முனிவர்கள் நால்வரும் அவ் வழியே தாங்கள் அனுபவம் பெற்று உய்ந்தனர் என்பது நிற்க, சிவாகம நெறியை உலகில் குருபரம்பரையில் வைத்து உணர்த்தத் திருவுளம் பற்றிய அப்பெருமான் நந்தி தேவருக்கு ஆகமங்களை உரைத்தருளி, அவர் வழியே பலர் வாயிலாக நிலவுலகில் குருபரம்பரைகளை நிலவச் செய்தனன் என்பது திருமந்திரத்தால் அறியப்படுவது. அப்பரம்பரைகள், '**நந்தி பரம்பரை**' எனப்படும். இனி, விநாயகர், முருகர் வாயிலாகவும் குருபரம்பரைகள் நிலவுலகில் தோற்றுவிக்கப் பட்டன என்பது ஆகமங்களில் பேறப்படுவதாகும். அப் பரம்பரைகள் 'கணபதி பரம்பரை' என்றும் 'கந்த பரம் பரை' என்றும் சோல்லப்படுகின்றன. மெய்கண்ட சந்தான மும், திருமூலர் மரபும் நந்தி பரம்பரைகளே. சிலாத முனிவ ராயினமைபற்றி நந்திதேவர், 'சைலாதி' எனப்படுவர். அதனால், நந்தி பரம்பரைகளை, 'சைலாதி மரபு' என்பர். இவற்றுலெல்லாம் தென்முகக் கடவுள் வடிவம் மோட்சத் தைத் தருகின்ற யோகவடிவங்களுள் முதன்மையானது என்பது தெளிவாகும்.

சிவபெருமான் இவ்வாறு தென்முகக் கடவுளாய் இருந்து வேதசிவாகமங்களினாலும், மோனநிலையினாலும் சனகாதி நால்வர்க்கும், நந்திபெருமானுக்கும் ஞானத்தை அருளிய வடிவம் '**மேதா தக்ஷிணாமூர்த்தி**' எனப்படும். மேதா—ஞானம். இவ்வாறே சனகாதி நால்வர்க்கும் யோகத்தை உணர்த்திய வர், **யோக தக்ஷிணாமூர்த்தி**. இவ்வடிவத்தில் யோகபட்டம்

விளங்கும். தும்புரு, நாரதர் முதலியோர்க்குச் சிவபெரு மான் வீணையைக்கொண்டு சாமகானம் செய்து காட்டிய வடிவம், வீணா தக்ஷிணாமூர்த்தி. இவ்வடிவம் நின்றகோலமாய் விளங்குவதாம். இவ்வாற்றாலெல்லாம் எல்லாவகையான ஞானங்கட்கும் முதல்வராய் நிற்பவர் சிவபெருமானே என் பது இனிது விளங்கும். ஆதலின், சைவ சமயம் கல்லால் நிழற் பெருமானையே முதலாசிரியராகக் கொண்டு விளங்கு கின்றது.

*" கல்லால் நிழல்—அல்லாத் தேவை*
*நல்லார் பேணார்—அல்லோம் நாமே "*

*( ஞா. ச. தேவாரம் )*

எனத் திருமுறையிலும்,

*" கல்லால் நிழல்மலை—வில்லார் அருளிய*
*பொல்லார் இணைமலர்—நல்லார் புனைவரே "*

*( சிவஞானபோதம் )*

எனச் சாத்திரத்திலும் சொல்லப்படுதல் காணலாம்.

தனக்கு ஓர் ஆசாரியன் இன்றித் தானே யாவர்க்கும் ஞானத்தைத் தருகின்ற ஞானாசாரியனாய் விளங்குவதால், உண்மைப் பரமாசாரிய மூர்த்தி தக்ஷிணாமூர்த்தியே. ஏனெ னில், 'பரமாசாரியன்' என்பது, தனக்குமேல் ஓர் ஆசாரியன் இல்லாது தானே எல்லார்க்கும் ஆசாரியனாகின்ற மூர்த்தி யையே குறிக்கும். இயற்கைப் பரமாசாரிய மூர்த்தியாகிய இப்பெருமானே தனது ஆசாரியத் தன்மையைப் பலரிடத்தில் வைத்து, உலகில் ஞான ஒளியைப் பரப்புகின்றான் என்பதை,

" திருமால்இந் திரன்பிரமன் உபமனியன் தபனன் நந்தி
செவ்வே ளாதித்
தருமமுது குரவருக்கும் தனதருளால் ஆசிரியத்
தலைமை நல்கி
வரும்எவர்க்கும் முதற்குருவாய் மெய்ஞ்ஞான முத்திரைக்கைம்
மலரும் வாய்ந்த
உருவழகும் குறுநகையும் காட்டிஅருள் தரும்சிவனை
உளத்துள் வைப்பாம் "

என்னும் சிவதத்துவ விவேகச் செய்யுள் நன்கு விளக்குகின்றது. இதனுள் ஆசாரியர் எழுவர் சொல்லப்பட்டிருத்தலைக் காண்கிறோம். (தபனன் - சூரியன். சேவ்வேள - முருகக் கடவுள்.)

மேலும், தக்ஷிணாமூர்த்தியின் வடிவமும் இதனுள் குறிக்கப்பட்டிருத்தல் நோக்கத்தக்கது. "மெய்ஞ்ஞான முத்திரை" என்றது, சின்முத்திரையை. இதனை, 'மோன முத்திரை' என்றும் கூறுவர். உருவழகு - அழகிய இளமை வடிவம். சனகாதி நால்வர், வயதுசென்ற முனிவர்களாதலின், 'குரு இளையவராய் இருக்க, மாணாக்கர் முதியரராய் உள்ளனர்' என்று தக்ஷிணாமூர்த்தியின் பெருமையை நயம்படக் கூறுதல் உண்டு. குறுநகை - புன்சிரிப்பு. இது, ஞானத்தின் பயனாய் நிறைந்து நிற்கும் வரம்பில் இன்பத்திற்கு அறிகுறியாம்.

வலக்கையில் சின்முத்திரையும், இடக்கையில் புத்தகமும், கல்லால் நிழலில் வீராசனத்தில் இருத்தலும் எல்லா



மேதா தக்ஷிணாமூர்த்தி வடிவங்களிலும் காணப்படுவன. மணிவடம், கமண்டலம், தாமரைமலர், அக்கினி முதலியவை ஏற்ற பெற்றியாற் சில சில வடிவங்களில் காணப்படும். மான் மழு ஏந்திய வடிவமும் உண்டு. எவ்வகையிலாயினும் ஞானத்தை விரும்புவோர் இறைவனை இத் தக்ஷிணாமூர்த்தி வடிவில் வழிபடுதல் இன்றியமையாததாகும்.

"தென்முகத்தின் முகமாய் இருந்தகொலு
எம்முகத்திலும் வணங்குவேன்"

என்கின்றார் தாயுமான அடிகள். இவர் அருளிய 'சின்மயானந்த குரு' என்னும் தலைப்புடைய பதிகம் முழுவதும் திருச்சிராப்பள்ளி மலைமேல் உள்ள தக்ஷிணாமூர்த்தியைத் துதிப்பதாகும். 'கொலு' என்பது, ஆட்சி பீடத்தில் இருந்து ஆட்சிபுரியும் நிலை. அஃது இங்கு ஞானபீடத்தில் வீற்றிருந்து, பக்குவான்மாக்களுக்கு ஞானத்தை வழங்கும் நிலையைக் குறித்தது.

தக்ஷிணாமூர்த்தியின் இத் திருவருள் நிலையில்தான் திருவருட்செல்வர்கள் தமிழகத்தில் ஞானபீடங்களை நிறுவி ஞான பரம்பரைகளை உலகில் என்றும் நின்று நிலவச் செய்தார்கள். அந்த ஞான பீடங்களில் கொலு வீற்றிருக்கும் மகாசந்நிதானங்களை, அந்த பீடத்தின் ஆதி பரமாசாரிய மூர்த்திகளாகக் கண்டு வணங்குவதோடல்லாமல், முதலாசிரியராகிய தக்ஷிணாமூர்த்தியின் அருட் கொலுவாகவும் கண்டு வணங்குதல் வேண்டும். அவ்வாறு வணங்குவார்க்கு அனுபவஞானம் வாய்த்தல் உறுதி. அத்தகைய வாய்ப்புக்குரிய நன்னாட்களில் ஒன்று இந்நாள்.

இதுபோது நிகழும், திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்தின் ஆதி பரமாசாரிய மூர்த்திகளாகிய ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜை விழா நிகழ்ச்சிகளைக் கண்டு களித்துவரும் அன்பர்கட்கு, ஆதீனத்தின் 25 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அருட் கொலுவையும், திருவுலாக் காட்சியையும் கண்டு வணங்கும் பேறு இன்று இனிது கிடைக்க இருக்கின்றது. அன்பர்கள் அனைவரும் இன்றும், என்றும் குரு தரிசனத்தின் பெருமையை நினைந்து குருமூர்த்திகளை வணங்கி வழிபட்டுத் தென்முகக் கடவுளின் திருவருட்குரியவராவார்களாக.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Amirthagadeswaraswami Devasthanam, Tirucadaiyur

The surroundings of the temple are clean and the atmosphere is solemn and inspiring. The temple is well maintained and administered.

(Sd.) D. Ramanathan,
Administrator: Karaikkal.

13—5—66.

உ

குருபாதம்

திருத்தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் வழங்கியருளிய

# அருளுரை

## இரவுபகல் அற்ற இடம்

இட்டா சனத்தில் இரவுபக லற்றிடத்தில்
முட்டா திருக்கஅருள் முற்றுந்தா - அட்டாங்க
யோகந்தான் நீங்கி ஒழியாச் சிவானந்த
ஆகந்தா சொக்கநா தா.

—குருஞானசம்பந்தர்

பொருள்களை, 'காட்சிப்பொருள், கருத்துப்பொருள்' என இரண்டாகப் பிரிப்பர் பொருளியல்புகளை ஆராய்வோர். கண்ணுக்குப் புலனாகும் பொருள் காட்சிப்பொருள். 'கண்' என்று சிறப்புப்பற்றிக் கூறினாலும், காது முதலிய மற்றைய நான்கு பொறிகளும் கொள்ளப்படும். எனவே நமக்குள்ள ஐம்பொறிகளுள் எந்தப் பொறிக்குப் புலனாகினும் அந்தப் பொருள், காட்சிப்பொருள் என்றே சொல்லப்படும்.

எல்லாப் பொருள்களும் காட்சிக்கு வருவதில்லை. அஃதாவது, ஐம்பொறிகளுள் ஒன்றற்கும் புலனாகாத பொருள்களும் உள. அவற்றை, காணப்பட்ட சில அடையாளங்களைக் கொண்டு கருதியுணர்கின்றோம். அன்பு, அருள், சினம் முதலியவைகள் கண்ணாற் காணப்படுவன அல்ல. என்றாலும், கண்ணீர் அரும்புதல், உற்றுநோக்குதல, கண்சிவத்தல் முதலிய அடையாளங்களால் இவற்றை உணர்கின்றோம். அதனால், இவையெல்லாம் கருத்துப்பொருள்கள்.

இவைகளுடன், 'கேள்விப்பொருள்' என்பதும் ஒன்று உண்டு. 'காட்சிப்பொருள்' என்பவற்றில் பொருள்களையே நேராகக் காண்கிறோம். கருத்துப்பொருளில் பொருள்களைக்

திருவாரூர் ஸ்ரீ அப்பர்சுவாமிகள் குருபூஜை விழாவில்
( 6 - 4 - 66 )



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமவர்கள் திருமுறை மகாநாட்டில்
அருளாசி வழங்கியருளல்

திருவாரூர் ஸ்ரீ அப்பர்சுவாமிகள் குருபூஜை விழாவில்
(16 - 4 - 66)



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமவர்கள்
திருவிடைமருதூர். வித்துவான். திரு. மு. நடராஜதேசிகரவர்கட்கு
"திருமுறைக்கலாநிதி" என்ற சிறப்புப்பட்டம் அளித்து ரூ 501. நிதி வழங்கியருள

காணுவிடினும், அவற்ருேடு இயைபுடைய சில அடையாளங்களைக் காண்கிருேம். 'கேள்விப்பொருள்கள்' என்பன. அந்த இரண்டும் இன்றி, பெரியோர் சொல்லும் சொல்லைக்கேட்டு அந்தக் கேள்வி ஒன்றினுலேதான் உணரக்கூடியனவாகும். கடவுள், வினை, சுவர்க்கம், நரகம் முதலியன அத்தகைய பொருள்களாகும்.

காட்சிப் பொருள்களை உணர்வதற்குக் காட்சியளவையே போதும். கருத்துப்பொருளை உணர்வதற்குக் காட்சிக்கு மேற்பட்ட கருதலளவை வேண்டும். கேள்விப் பொருளை உணர்வதற்குக் காட்சியளவையும். கருதலளவையும் பயன்படமாட்டா; அவற்றிற்கு மேற்பட்ட உரையளவை வேண்டும். அதனுல்தான் இம்மூன்று அளவைகளும் இன்றியமையாத அளவைகள் எனச் சைவசித்தாந்தம் கூறுகின்றது. காட்சியளவை, 'பிரத்தியட்சப் பிரமாணம்' என்றும், கருதலளவை, 'அனுமானப்பிரமாணம்' என்றும், உரையளவை, 'ஆகமப் பிரமாணம்' என்றும் வடமொழியிற் சொல்லப்படுகின்றன.

இனி, காட்சிக்குப் புலனுவது உலகம்; கருத்துக்குப் புலனுவது உயிர்; கேள்விக்குப் புலனுவது கடவுள் என்று ஒருவாறு கூறலாம். இஃது ஓரளவில்தான் பொருந்தும்; அதனுல், 'ஒருவாறு கூறலாம்' என்றுதான் சொல்லவேண்டும். ஏனெனில்; உலகம் காட்சிக்குப் புலனுவது உண்மை. ஆனுல், முற்றிலும் புலனுகிவிடுவதில்லை. அதுபோலவே. சில அறிகுறிகளால் 'உயிர்' என்பது ஒன்று உண்டு என்பது உணரப்பட்டும் வழங்கப்பட்டும் வருகின்றது. ஆனுல் அதனது இயல்பு முழுவதும் கருதலளவையினுலே உணரப்படுவதில்லை. இனிக் கடவுட் பொருளும் அவ்வாறுதான். அஃதாவது பெரியோர்கள் சொல்லைக் கேட்கின்ற அளவில், 'கடவுள் உண்டு' என்று உணர்கின்ருேமே யன்றி, நாமே நேராகக் கடவுளைக் காண்கின்ருேமில்லை. அவ்வாறு காண்பதற்கு அனுபவம் வேண்டும்.

காட்சி முதலிய மூன்றினுலும் அறியப்படும் உலகம் முதலிய மூன்று பொருள்களுள், காட்சிப் பொருளாகிய உலகம், மாறுதலையே தனக்கு இயல்பாக உடையது. உலகப்பொருள்களில் யாதொன்றும் நேற்று இருந்ததுபோல இன்று இருக்கவில்லை. இன்று இருப்பதுபோல நாளை இராது; மாறிக்கொண்டேதான்

இருக்கும். "மாற்றமாம் வையகம்" என்று உலகத்திற்கு ஓர் அடைமொழி கொடுத்து அருளிச்செய்தார் மாணிக்கவாசகர்.

கருத்துப்பொருளாகிய உயிர், உண்மையில் மாறுதலடையா விடினும், உலகத்தோடு சேர்ந்து நிற்கும் காரணத்தால், மாற்றம் அடைவதுபோலக் காணப்படும். ஆகவே, கேள்விப்பொருளாகிய இறைவன் ஒருவனே மாற்றத்திற்கு உள்ளாகாதவன்.

உலகம் அடைகின்ற மாறுதல்தான் எத்தனைவகை! அவற்றால் உயிருக்கு உண்டாகின்ற மாறுதல்தான் எத்தனை! தோற்றம், வளர்ச்சி, இறுதி - மேல், கீழ், நடு - மேடு, பள்ளம் - குளிர் வெப்பம் - ஒளி, இருள் - பகல், இரவு இப்படி எத்தனை வகையான மாறுதல்கள்! இவற்றால் வருகின்ற இளமை, முதுமை - பிறப்பு. இறப்பு - நல்லுடல், பிணி - உறக்கம், விழிப்பு-நினைப்பு, மறப்பு - செல்வம். வறுமை - இன்பம், துன்பம் - இப்படிப் பட்ட எத்தனை மாறுதல்களை உயிர் அடையவேண்டியுள்ளது! எந் நேரமும் இவ்வாறான மாறுதலுக்கு உள்ளாகியிருப்பது இன்ப நிலையாகுமா? இடைவிடாது சுழலும் சுழலாகிய துன்பமன்றோ இது? இதனை நினைத்துப் பார்ப்பவர் எத்தனைபேர்! ஆயிரத்தில் ஒருவர் இருப்பதும் அருமை! அருமை! நினைத்துப் பார்க்கும் வாய்ப்புக் கிடைக்குமாயின், அச்சமும், கவலையும் அல்லவோ உண்டாகும்! "நினைத்தால் நெஞ்சம் பகீர் என்குதே" என்கின்றார் தாயுமான அடிகள். ஆனால், நாமோ இவைகளைப் பற்றிச் சிறிதும் எண்ணாமல் இச்சூழலில் கிடந்தே இன்பமாகப் பொழுது போக்குகின்றோம். இந்நிலை இரங்குதற்கு உரியது என்பதை அப்பர் பெருமானார்,

"தளைத்துவைத் துலையை ஏற்றித்
தழலெரி மடுத்த நீரில்
திளைத்துநின் றாடு கின்ற ஆமைபோல்"

என்று அருளிச்செய்கின்றார். ஆமையை உண்கின்றவர்கள், அதனைக் கொண்டுவந்து, எரிகின்ற அடுப்பின்மேல் ஏற்றப்பட்ட உலைநீரில் இடுகின்றபொழுது, ஆமை தனக்குத் தண்ணீர் கிடைத்தது என்று மகிழ்ந்து, அதில் மூழ்கிக் களிக்குமாம். ஆனால், சற்று நேரத்திற்குப்பின் தனக்கு விளையப்போவதை அது அறிவதில்லை. அதுபோலத்தான் ஞானம் இல்லாதவர்

இவ்வுலகத்தினது உண்மை இயல்பை அறியாது, இதில் மயங்கிக் களிக்கின்றனர் என்று அருளுகின்றார் நாவுக்கரசர். ஞானம் கைவரப்பெற்றவர் அவ்வாறு இருப்பார்களோ!

" தினைத்துணை யேனும் பொறேன்துயர்
ஆக்கையின் திண்வலையே "

என்று, ' ஒரு தினையளவும் இவ்வுலகத் துன்பத்தை இனிப் பொறுக்க என்னால் இயலாது ' என்று முறையிடுகின்றார் மாணிக்கவாசகர். அத்துன்பங்களாவன எவை? மேல் பல வாறு வகுத்துக்காட்டிய மாறுதல்களே. இம்மாறுதல்களுள் ஒன்றும் இல்லாது என்றும் ஒருபெற்றியாய் இருக்கும் நிலையே வீடுபேறு. அஃது அலைவு ஒன்றும் இல்லாத அமைதிநிலை. இதனை, ' சாந்தி ' என்று கூறுகின்றன உபநிடதங்கள். ' பேரா இயற்கை ' (அசைவில்லாத உண்மைநிலை) என்கின்றார் திருவள்ளுவர். " அலையி லாத சாகரம்போல் - அனிலஞ்சேரா விளக்கதுபோல் " என்று உவமைகூறி விளக்குகிறார் ஒரு பெரியவர் (திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள்).

சாகரம் - கடல், அனிலம் - காற்று. கடல் எவ்வளவு பெரிதாய் நீல நிறத்தோடு அழகிய காட்சியை அளிக்கின்றது. ஆயினும் அஃது எப்பொழுதும் அலைந்துகொண்டே இருக் கின்றது. அந்த அலைவு இல்லாதிருப்பின், இன்னும் அஃது எவ்வளவு இன்பமாய் இருக்கும்! விளக்கு அழகாகச் சுடர்விட்டு எரிகின்றது. ஆயினும், அஃது ஒரே நிலையில் நேராக நில்லாமல், காற்றினால் எப்பொழுதும் அசைந்து வளைவுறுகின்றது. அவ்வாறின்றி, அஃது எப்பொழுதும் நேராய் நின்று காட்சியளிக்குமாயின், இன்னும் எவ்வளவு அழகாய் இருக்கும்! இவைபோலவே, ஆன்மா, தனது அறிவு காரணமாக உலகத்தைவிட எவ்வளவு சிறந்த பொருள்! ஆனால் அது பாசம் காரணமாக எத்துணை அலைவுகளுக்கு உள்ளாகின்றது! அந்த அலைவுகள் யாதும் இன்றி ஒரே நிலையில் நிற்குமாயின், அஃது எவ்வளவு இன்பமுடையதாகும்! அலையே இல்லாத கடலும், அசைவே இல்லாத விளக்கும் இருக்குமாயின், அவை மிகவும் வியத்தற்குரியனவாம். அதுபோல, அலைவில்லாத ஆன்மா இருக்குமாயின், அது வியத்தற்குரியதே. என்றாலும், அலை யில்லாத கடலும், அசைவில்லாத விளக்கும் எங்கும் இல்லை; இருக்கவும் முடியாது. ஆனால், அலைவில்லாத நிலையை அடைந்த

ஆன்மாக்கள் பல உள்ளன, இனியும் அந்நிலையை அடைவன பல. இந்த நிலையையே. 'இராப்பகல், அற்ற இடம்' என்று சாத்திரங்கள் கூறுகின்றன.

'இரவும் பகலும் இல்லாத இடங்கூட இருக்கின்றதா' என்று வியப்புடன் வினவலாம். உண்டு, இரவும் பகலும் பூத பௌதிகங் களொடு கூடிய இவ்வுலகத்தில்தான் உண்டு. இதனைக் கடந்த வீட்டுலகத்தில் அவை இல்லை. அவ்வாறாயின் இந்த உடம்பு உள்ள பொழுது அடைய இயலாத இடந்தானே அது?' என்று கேட்கலாம். அஃது ஒருவகையில் உண்மையேயாயினும், இவ் வுடம்பு உள்ளபொழுதேயும் அதனை அடைதல் கூடும். அஃதா வது 'இரவு, பகல்' என்பன உண்மையில் நாம் காண்கின்ற இரவு பகல்களைக் குறிக்கவில்லை 'இரவு' என்பது அறியாமை யையும், 'பகல்' என்பது அறிவையுமே குறிக்கின்றன. எனவே, 'இரவு பகல் அற்ற இடம்' என்பது, 'அறியாமையும், அறிவும் அற்ற நிலை' என்பதையே குறிக்கின்றது என்பது விளங்கும்.

'அறியாமை நீங்க வேண்டும்' என்பது உண்மை. அதனால், 'அறியாமை அற்ற இடம்' என்பது பொருந்தும்; 'அறிவும் அற்ற இடம்' என்பது, எவ்வாறு பொருந்தும் என்று ஐயுறலாம். 'அறிவு' என்பது, இங்கு, ஆன்மாவிற்குக் கருவி கரணங்களால் உண்டா கும் அறிவையேயாகும். கருவி கரணங்கள் சேர்ந்தால் ஆன்மா விற்கு அறிவு உண்டாகும். அவை நீங்கினால், அறியாமை வந்து பொருந்தும். இஃது அன்றாடம் நமக்கு அனுபவமாய் நிகழ்வது. கருவிகள் சேர்ந்தால் விழிப்பும், அவை நீங்கினால் உறக்கமும் உண்டாவது அனுபவமன்றோ! இனி விழித்திருக்கும்பொழுதும் கருவிகள் செயற்பட்டால் நினைப்பும், அவை செயற்படா விட்டால் மறப்பும் உண்டாகின்றன. கருவி கரணங்கள் இல்லாமலே நமக்கு அறிவு இருக்கவேண்டும். அப்பொழுது 'விழிப்பு, உறக்கம்' என்ற இவைகளும், 'நினைப்பு, மறப்பு' என்ற இவைகளும் நமக்கு உண்டாகமாட்டா. அந்த நிலையே இராப் பகல் அற்ற இடமாகும்.

ஆனால், கருவிகள் இல்லாமலே நமக்கு அறிவு உண்டாதல் எப்படி? இறைவனது அருள் விளக்கத்தினாலே அந்நிலை உண்டாகும். இப்பொழுது நாம் கண், காது முதலிய புறக் கருவிகளையும், மனம் முதலிய அகக்கருவிகளையும் கொண்டு பொருள்களை அறிந்து வருகின்றோம். அக்கருவிகள் அழிபவை;

உள்ள பொழுதும் இளைப்படையக் கூடியவை. அதனால், அவை உள்ளபொழுது நமக்கு அறிவும், இல்லாதபொழுது அறியாமையும் உண்டாகின்றன. இறைவனது அருள் விளக்கத்திற்கு அவ்விரண்டு தன்மையும் இல்லாமையால், அதனைத் துணையாகப் பற்றிக்கொண்டால், இந்த மாறுதல்களுள் ஒன்றும் இன்றி, என்றும், ஓரே நிலையாய், அறிவே வடிவாய், இன்பமே வடிவாய் வாழலாம். சிவஞானசித்தியாரில், "ஓர் விருத்தப்பாதிபோதும்" என்று சொல்லப்படுகின்ற பாதி விருத்தம் இதைத்தான் குறிப்பிடுகின்றது. அந்த விருத்தம் வருமாறு:-

"அறியாமை அறிவகற்றி அறிவினுள்ளே
அறிவுதனை அருளினால் அறியாதே அறிந்து
குறியாதே குறிந்து அந்தக் கரணங்க ளோடும்
கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்
பிறியாத சிவன்தானே பிரிந்து தோன்றிப்
பிரபஞ்ச பேதமெலாந் தானாய்த் தோன்றி
நெறியாலே இவையெல்லாம் அல்ல வாகி
நின்றென்றும் தோன்றிடுவன் நிராதார னாயே"

இதனுள், "அறியாமை அகற்றி" என்று மட்டும் கூறாமல், 'அறிவகற்றி' என்றும் கூறியிருப்பதையும் "அறிவுதனை அறிந்து" என்று, மற்றோர் அறிவு கூறப்படுவதையும் நோக்க வேண்டும். அகற்றப்படவேண்டிய அறிவு, கருவிஅறிவு, இதுவே 'பாச ஞானம்' எனப்படுவது. அறியப்படவேண்டிய அறிவு பதி. அதனை, "அறியாதே அறிந்து" என்பது, தற்போதத்தினால் அறியாது வேறு வகையினால் அறியவேண்டும் என்றபடியாம். தற்போதமே, 'பசுஞானம்' எனப்படும். தற்போதத்தால் அறியாது வேறுவகையாக எவ்வாறு அறிவது என்பார்க்கு 'அருளினால்' என்று கூறப்பட்டது. அருளே, 'பதிஞானம்' எனப்படும். அருளினால் அறிவுதனை அறிந்த பின்பு கருவி கரணங்களோடு கூடுதல் கூடாது; கூடினால் வாடுதல் (துன்பம்) உண்டாகும் என்பதற்கு, "அந்தக் கரணங்களோடும் கூடாதே வாடாதே" எனப்பட்டது. இந்நிலையில் நின்றால், அன்பு பெருகும் என்பதற்கு, "குழைந்திருப்பையாகில்" என்றார். ஆகவே, 'அஞ்ஞானத்திலும் அழுந்தாமல், பாசஞான பசு ஞானங்களிலும் நில்லாமல், பதிஞானத்தால் பதியை உணர்ந்தால், அன்பு பெருகிச் சிவம் வெளிப்பட, அன்பே சிவமாய் அமர்ந்திருக்கும் நிலை வாய்க்கும்' என்பது இத்திருவிருத்தத்தால்

தெளிவுபடுத்தப்பட்டது. அன்பே சிவமாய் அமர்ந்திருப்பதற்குரிய வழி இத் திருவிருத்தத்தின் முதற்பாதியில் சொல்லப்பட்டிருப்பதுபற்றி, அந்தப் பாதி விருத்தமே அநுபவத்திற்குப் போதுமானது என்று சொல்லப்பட்டது. அவ்வாறு சொல்லியருளியவர் எங்கள் ஆதிபரமாசாரிய மூர்த்திகளாகிய ஸ்ரீ குருஞானசம்பந்தரே.

"ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
நீறாக முத்திநிலை நிற்போர்க்குப் - பேறாகப்
பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியிற் சித்தியிலே
ஓர்விருத்தப் பாதிபோ தும்"

என்ற சிவபோகசார வெண்பாவே அங்ஙனம் அருளப்பட்டதாகும்.

இத்திருவிருத்தத்தில் "அறியாமை" என்றதே இரவு, இது 'கேவலம்' எனப்படும். 'அறிவு' என்றதே பகல். இது 'சகலம்' எனப்படும். மறப்பு நினைப்புக்களாவனவும் இவையே. எனவே, கேவல சகலங்களாகிய மறப்பு நினைப்புக்களே, 'இராப் பகல்' என்பது தெளிவு. கேவல சகலங்கள் நீங்கிய சுத்த நிலையாகிய முத்திநிலையே இராப் பகல் அற்ற இடம். அதுவே, அறிவினுள்ளே அறிவுதனை அருளால் அறிந்து நிற்பது. "அறிவை அறிவது பொருள்" என்று அருணகிரிநாதரும் இதனை அருளுகின்றார். இராப்பகல் அற்ற இடத்திலே இருப்பதற்கு, 'உன்னுடைய அருளை முற்றும் தா' என்று எங்கள் ஆதிபரமாசாரியர் தம் ஆன்மார்த்த மூர்த்தியை வேண்டிக்கொண்ட வெண்பாவே முதலில் தரப்பட்டது.

இராப்பகல் அற்ற இடத்தில் இருப்பதற்கு எந்த ஆசனத்திலும் இருக்கலாம். அஃதாவது காமியமாகச் செய்யும் யோகம் முதலியவற்றிற்குக் குறிப்பிட்ட ஆசனத்தில் இருக்கவேண்டும், நிட்காமியமாகச் செய்யும் ஞான நிட்டைக்கு அவ்வாறு வேண்டுவதில்லை; விருப்பமான ஆசனத்திலே இருக்கலாம் என்பதற்கு, "இட்டாசனத்தில்" என்றார்கள். எந்த ஆசனத்தில் இருப்பினும் அருளை மறவாதிருத்தல் இன்றியமையாதது. அதை மறப்பின் இந்நிலைக்கு முட்டுப்பாடுவரும் என்பதை, "முட்டாதிருக்க" என்றும், "அருள் முற்றும் தா" என்றும் வேண்டுகிறார்கள். எனவே, இராப்பகல் அற்ற இடத்தில்

இருப்பது எத்துணை அருமையான செயல் என்பது தோன்றும். அருணகிரிநாதரும் தமது கந்தர் அலங்காரத்தில்,

" அராப்புனை வேணியன் சேய்அருள் வேண்டும் ;
அவிழ்ந்தஅன்பால்
குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டும் ;
கொடியஐவர்
பாராக்கறல் வேண்டும் ; மனமும் பதைப்பறல்
வேண்டும் என்றால்,
இராப்பக லற்ற இடத்தே இருக்கை
எளிதல்லவே "

என்றார்.

அட்டாங்க யோகமும் இரவு பகலைக் கடக்கமாட்டாது, அவற்றினுள்ளே பொருந்தி, அணிமாதி அட்ட சித்திகளைப் பெற்றிருக்கும் நிலையே ; ஆகையால் அதில் தங்களுக்கு விருப்பமில்லை என்பதை, "அட்டாங்க யோகந்தான் நீங்கி" என்று தெரிவித்தார்கள். இரவு பகல் அற்ற இடம் சிவம் அன்றி வேறில்லை. ஆகவே, அங்கு அடைவது சிவானந்தப் பெருவாழ்வாகும் என்பது பற்றி, "சிவானந்த ஆகம் தா சொக்கநாதா" என்று தங்கள் ஆன்மார்த்த மூர்த்தியை வேண்டுகிறார்கள். ஆகம் - உடம்பு. சிவானந்தமே வடிவாய் இருக்கும் நிலை, சிவானந்த ஆகம். இரவு பகல் அற்ற இடம் சிவமே என்பதை, "கங்குல்பகல் அறநின்ற எல்லையுளது எது" என்று வினவும் முகத்தால் விளக்கினார் தாயுமானவர்.

இதனைத் தொடர்ந்து சில வெண்பாக்களில் எங்கள் ஆதி குருமூர்த்திகள், இரவு பகலற்ற இடத்தே மூட்டாதிருப்பதற்கு மோகம் கரைய வேண்டும் ; மும்மலம் நீங்க வேண்டும், ஊனுது வான உடலிலே பற்றுக்கூடாது என்றெல்லாம் சொல்லி 'என்னை ஆண்டுகொண்ட பின்பும், இந்தக் கீழ்நிலைகளிற் செல்லும்படி கைவிடலாமோ' என்று முறையிட்டு, அநாதியே பற்றிய மலங்களை அறவே களைந்து, அறிவானந்த மயமாய் விளங்கும் அடியார்களுள் என்னையும் ஒருவனாகச் சேர்த்து, நாததத்துவத்தையும் கடந்த நிலையில் வைத்தருள வேண்டும் என்று வேண்டிக்கொள்கின்றார்கள். இத்தகைய அருள்மொழிகளைச் சிந்தித்துத் தெளிந்தால், இரவு பகலற்ற இடத்திலே இருந்து இன்புறுகின்ற சீவன் முத்திநிலை இப்பிறப்பிலே கிடைப்பதாகும்.

# EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam
Sri Vaithianathaswamy Devasthanam, Vaithiswarankoil.

I think Sri Vaidyanathaswamy temple is the best maintained temple in the whole of India for which credit should go to His Holiness Mahasannidhanam of Dharmapuram Mutt. May His Holiness live long to continue this noble work in this atomic age and let others also follow his excellent work. Nearly after a decade I have come here again only to find remarkable improvements. I am grateful to the fine courtesy shown to me by the temple staff who is taking very keen interest in the temple administration.

(Sd.) N. P, Seshadri,
Secretary, National Cultural Organisation
Planning Commission Office, New Delhi.
14—5—1966.

Dharmapuram Adhinam
Sri Amirthagatesvaraswamy Devasthanam, Tirucadaiyur.

தேவஸ்தான கமிட்டியினர் கோவிலை நன்கு பராமரிக்கின்றனர் என்று காணும்போது மிக மகிழ்ச்சியடைகின்றேன். வேதபாராயணங்கள் இங்கு படிக்கப்படுவதாகவும் அறிகின்றேன். நிர்வாகஸ்தர்களை மிகவும் பாராட்டுகிறேன்.

(ஒ-ம்.) வெங்கடசுப்பாரெட்டி,
முதலமைச்சர், புதுவை.

13—5—66.

என்றும் பதினாறு வயதோடு விளங்குகின்ற இப் புண்ணிய ஸ்தலமாகிய திருக்கடையூருக்கு விஜயம்செய்த எங்களுக்கு மட்டில்லா மகிழ்ச்சி. என்றென்றும் நிலைத்திருக்கக்கூடிய பயபக்தி நிறைந்திருக்கிறது. இதனை நடத்திவருகின்ற சந்நிதானத்திற்கு எங்களுடைய பாராட்டு என்றும் உண்டு.

(Sd.) V. M. C. Varadha Pillai,
Labour Minister,
Pondy.

13—5—66.

# சித்தாந்த வினாவிடை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான்.

திரு. சி. அருணைவடிவேலு முதலியார்

( மலர் 25, இதழ் 6, பக்கம் 231 இன் தொடர்ச்சி )

## பசுவிலக்கணம் ( உயிரின் இயல்பு )

மாணாக்கன் : காணப்பட்ட உடம்பு முதலாக, காணுதற்கரிய கடவுள் ஈறாகப் பல பொருள்களை, 'இஃது உயிர் இஃது உயிர்' என மயங்கிக் கூறுவார் கூற்றுக்கள் யாவும் பொருத்தம் ஆகாமையை விளக்கினீர்கள்; இனியும் அவ்வாறு பிற பொருள்களை உயிர் என மயங்கிக் கூறுவார் உளரோ?

ஆசிரியர் : இல்லை; உயிரல்லாதவற்றை உயிர் என மயங்கிக் கூறுவார் கூற்றுக்களெல்லாம் ஒருவாறு எடுத்துக் கூறி, அவை அனைத்தும் மயக்க உரையாதல் விளக்கப்பட்டுவிட்டன.

மாணாக்கன் : ஆயினும், 'இஃது உயிரன்று; இஃது உயிரன்று' என்று உயிரல்லாதவற்றை விலக்கியதன்றி, 'இதுதான் உயிர்' என்று அடிகள் அருளிச்செய்யவில்லையே!

ஆசிரியர் : உயிர் காட்சிப் பொருளாயினன்றோ அவ்வாறு உனக்கு, 'இதுதான் உயிர்' என்று காட்ட முடியும்? அதுதான் காட்சிப் பொருளன்றாகலின், அதனை எவ்வாறு சுட்டிக் காட்ட இயலும்?

மாணாக்கன் : உயிர் காட்சிப் பொருள் அன்றாயின், அதனை 'உண்டு' என்று துணிதல் எப்படி?

ஆசிரியர் : ஒருபொருளை, 'அஃது உண்டோ, இல்லையோ' என ஆராய்வதற்கு முன்னர், அதன் இயல்பு இது என்பதை ஒருசிறிதேனும் உணர்தல் வேண்டும். ஏனெனின், அதனை உணராமலே அதைப்பற்றி ஆராய்தல் எவ்வாறு கூடும்? உதாரணமாக, 'குடம் உண்டு; குடம் இல்லை' என்றால், 'குடம்' என்பது இத்தன்மையது என்பது முன்பே தெரிந்திருத்தல்

வேண்டும். இல்லையேல், 'குடம்' என்னும் சொல் பொருள் படாது. இனி, 'முயலுக்குக் கொம்பில்லை; கானலில் நீர் இல்லை' என்று கூறினாலும், 'முயல், கொம்பு, கானல், நீர்' என்பன இத்தன்மையன என்பதும் அவ்வாறு முன்பே தெரிந்திருத்தல் வேண்டும். இல்லையேல், 'முயல' முதலிய சொற்கள் பொருள்படா. இங்ஙனமே, 'கடவுள் உண்டு' என்பவரும், 'கடவுள் இல்லை' என்பவரும், 'கடவுள்' எனப்படுகின்ற பொருள் இன்ன தன்மையை உடையது என்ற முடிவை முதலில் வைத்துக்கொண்டுதான் பேசுகிறார்கள். அஃதாவது, 'கடவுள் என்பது, காணப்பட்ட இவ்வுலகத்தைத் தொழிற்படுத்துகின்ற ஒரு பெரும்பொருள்' என்று வைத்துக்கொண்டுதான், அதனை, 'உண்டு' என்றோ, 'இல்லை' என்றோ வாதிக்கின்றனர். இங்ஙனம், 'கடவுள்' என்ற பொருள் பற்றி, அனைவர்க்கும் ஒரு பொதுக்கருத்து இருத்தல் பற்றி, அதனை வைத்தே திருவள்ளுவரும், மெய்கண்டாரும் 'கடவுள் உண்டு' என்பதனை முதற்கண் நிலைநாட்டி, பின்பு அதன் இயல்புகளை விரிவாகக் கூறுகின்றனர். மேலும் அவர்கள், 'கடவுள் உண்டு' என்பதை அவ்வாறே கடவுள்மேல் வைத்துக் கூறாது, 'இவ்வுலகம் ஒரு தலைவனை யுடையதே' என்றும், 'இவ்வுலகம் தானே தோன்றியதன்று; ஒருவனால் தோற்றுவிக்கப்பட்டதே' என்றும் இவ்வாறு உலகின் மேல் வைத்துக் கூறுவதும், 'பொருளினது இயல்பை உணர்ந்தன்றி, அதனது உண்மையை (இருப்பை) உணர்தல் இயலாது' என்னும் கருத்தினாலேயாம். இதனை அவர்தம் மொழிகட்குப் பொருள் உணர்த்திய உரையாசிரியர்கள் தெரிவித்திருத்தல் வெளிப்படை. ஆகவே, 'உயிர் உண்டு' என்று துணிவதற்கு, முதற்கண், 'அதன் இயல்பு இன்னது' என்பதனை உணர்தல் வேண்டும்.

**மாணாக்கன் :** அங்ஙனமாயின், உயிரின் இயல்பு யாது ?

ஆசிரியர் : 'அறியும் தன்மை யுடையது உயிர்' என்பதை முன்பு பலவிடத்தும் கூறிவந்தோம், அது. பொதுவாக யாவராலும் கொள்ளப்படுவது. உயிரைப் பற்றிச் சிறப்பாக அறிய வேண்டுவன மற்றும் பல உள. அது நிற்க, அறிவு பண்பு; உயிர் அதனை யுடைய பண்பி. அறிவாகிய பண்பு, வேறு சில பண்புகள் போலக் காட்சிக்குப் புலனாவதின்று; கருத்திற்கே புலனாவதாகும். அறிவாகிய பண்பு காட்சிக்குப் புலனாகாதொழியவே, அதனை யுடைய உயிராகிய பண்பியும் காட்சிக்குப் புலனாகாததாகின்றது. கருத்திற்கு மட்டுமே புலனாகின்ற பண்பை,

'குறிப்பு' எனக் குறியிட்டு வழங்குவர் தொல்லாசிரியர். இவ்வாறன்றிக் கருத்திற்கு மட்டுமே புலனுகின்ற அறிவை, காணப்பட்ட உடம்பின் பண்பாகக் கூறுதல் பொருந்தாது என்பதனை மேலே விளக்கினேம். அதுவன்றிக் கருத்திற்குமட்டுமே புலனுகின்ற மனம் முதலிய பிற கருவிகளின் பண்பாகவும் அறிவைக்குறித்தல் பொருந்தாமையையும் விளக்கினேம். இனி எல்லாவற்றையும் அறிந்து அனுபவித்து வருகின்ற அறிவைச் 'சூனியம்' என்று கூறுவதும் 'ஈன்ருள் மலடி' என்பதுபோலப் பொருத்தமற்ற வாதம் என்பதையும் காட்டினேம். ஆகவே, இங்கு உடம்பு முதலியவற்றைப் பற்றி நிற்கின்ற அறிவு என்பது உள்பொருள் என்பதும், அதனையுடைய பொருள், காணப்படுகின்ற உடம்பும், கருதப்படுகின்ற மனம் முதலிய கருவிகளும் ஆகியவற்றுள் ஒன்றும் அன்று' என்பதும் தெளிவாயின. இனி, 'அறிவுடைய பொருள்' என்றே கேட்கப்படுகின்ற பரப்பிரமம் இருப்பதால், அதனது அறிவே, இங்கு உடம்பு முதலியவற்றின் செயற்பாடுகளால் கருதி உணரப்படுகின்ற அறிவு எனல் பொருத்தமாகாமையை இறுதியில் தெரிவித்தோம். இவ்வாற்ருல், 'பருவுடம்பு (தூல சரீரம்), நுண்ணுடம்பு (சூக்கும சரீரம்), நனிநுண்ணுடம்பு (பர சரீரம்) என்னும் கருவிகளாகிய சடப்பொருள்களினும், அறிவே வடிவாய் நிற்கும் கடவுட் பொருளினும் வேருய் நிற்கின்ற அறிவுடைப் பொருள் யாது அதுவே உயிர்' என உயிர் உண்மை பெறப்பட்டவாற்றினை ஓர்ந்துணர்ந்து கொள்க.

மாணுக்கன் : 'உயிராவது இது' என அடிகள் அறிவுறுத்தியவாற்றை அடியேன் இதுபோது உணர்கின்றேன். அது நிற்க, 'உயிர், அறியும் தன்மையுடைத்து என்பதனேடு, அதனைப் பற்றி அறிய வேண்டுவன மற்றும் பல உள' என்றீர்கள்; அவற்றை அருளிச்செய்தல் வேண்டும்.

ஆசிரியர் : 'பதி' அல்லது 'இறை' எனப்படும் கடவுட் பொருள் ஒன்றே; பல இல்லை' என்று முன்னே கூறினேம். உயிர் அவ்வாறன்றி, அளவிறந்தன. அதனுல், இறையை, 'ஏகன்' என்றும், உயிரை, 'அனேகன்' என்றும் கூறுவர்.

மாணுக்கன் : ஆம்! 'உயிர்கள் எண்ணிறந்தன' என்பது, பொதுவாக யாவரும் அறிந்ததே. அஃதாவது, உலகில் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் ஈருகச் சொல்லப்படுகின்ற வகையில் அளவில்லாத உடம்புகள் காணப்படுகின்றனவாதலாலும், அவ்வுடம்பு தோறும் உயிர்கள் உள்ளன என்று கொள்ளப்படுதலாலும் உயிர்கள் எண்ணிறந்தன என்பது பொதுவாகச் சொல்லப்

படுவதே; ஆயினும், உண்மையில், உடம்புதோறும் உள்ள உயிர்கள் தனித்தனி வேறு வேறு பொருள் என்பதற்கு என்ன சான்று உள்ளது ?

ஆசிரியர் : இதற்குப் பெரிய சான்று ஒன்றும் வேண்டுவதில்லை; ஓர் உயிர் ஓர் உடம்பில் நின்று அனுபவிக்கும் இன்பத் துன்ப அனுபவங்கள் இன்னோர் உயிர்க்கு இல்லாமையால், ஒவ்வோர் உடம்பில் உள்ளதும் தனித்தனி வேறுவேறு உயிரே என்பது எளிதின் விளங்குவதாம். அதுவன்றி, பல உடம்புகளில் உள்ள உயிர்களும் ஒன்றே என மெய்ப்பிப்பதற்கு வழிஇல்லை. ஆதலின், உயிர்கள் ஒன்றல்ல : பலவேயாம். எனவே, பதியை, 'ஒன்றே' என்று உணர்தல்போல, பசுவை, 'ஒன்றல்ல; பல' என்று உணர்தல் வேண்டும்.

இன்னும், பதியும் அறிவுடையது ; பசுவும் அறிவுடையது என்றாலும், பதியின் அறிவு தானே விளங்குவது. அஃதாவது, அறிவிப்பதற்குத் துணை ஒன்றை வேண்டாது, தானே அறிவது. அறியுங்கால் அறியப்பட்ட பொருளில் அழுந்தி அதன் தன்மையைப் பெறுது தன்னியல்பில் நின்றே அறிவது; அதனால், அது 'சுதந்திர அறிவு' எனப்படும். பசுவினது அறிவு அவ்வாறின்றிப் பிறிதொரு பொருள் அறிவிக்கவே அறியும் தன்மையுடையது. அறியுங்காலும் அறியப்படும் பொருளில் அழுந்தாது தன்னியல்பில் நின்று அறியாது. அதன்கண் அழுந்தி, அதன் தன்மையதாகியே அறிவது. அதனால், அது பரதந்திர அறிவாகும். அறியப்படும் பொருளில் அழுந்தி அதன் தன்மையதாதல், 'சார்ந்ததன் வண்ணமாதல்' எனப்படும். பதியினது அறிவு, பொருள்களை ஒவ்வொன்றாய் அறியாது, எல்லாவற்றையும் ஒருங்கே அறிவது ; மேலும் அவற்றை இடைவிடாது அறிந்தவாறே அறிந்து நிற்பது. அதனால், அது, 'பேரறிவு' அல்லது 'முற்றறிவு' எனப்படும். பசுவினது அறிவு அவ்வாறன்றி, ஒருகாலத்து ஒருபொருளையன்றிப் பிறிதொன்றை அறிய மாட்டாது, ஒவ்வொன்றாகவே அறிவது; அதனையும் விட்டு விட்டு அறிவது. அதனால், அது, 'சிற்றறிவு' எனப்படும். பதியினது அறிவு தான் அறிதலே யன்றிப் பிறிதோர் அறிவுக்கும் அறிவாய் நின்று அதனையும் அறியச்செய்யும் தன்மையுடையது. அதனால், அது, 'நுண்ணறிவு' அல்லது 'சூக்கும சித்து' எனப்படும். பசுவினது அறிவு அத்தகைய ஆற்றலின்றி, அறிவித்தால் அறியுந் தன்மையைமட்டுமே உடையது. அதனால், அது, 'பருவறிவு' அல்லது 'தூல சித்து' எனப்படும். என்ற இவற்றை

யெல்லாம் முன்பு ஆங்காங்கு விளக்கிவந்தோம். இங்குக் கூறப் பட்ட பசுவின் இயல்புகள் அனைத்தும், அதற்கு இயற்கையாய் என்றும் உள்ள தன்னியல்புகளாகும். இத் தன்னியல்புகளுள், 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்னும் தன்மை பசுவிற்கு, முதன்மை யாகச் சொல்லப்படும் தன்னியல்பாகும்.

சார்ந்ததன் வண்ணமாதலாவது, தன்னால் சாரப்பட்ட பொருளின் தன்மையையே தன் தன்மையாகக்கொண்டு நிற் பது. ஒரு பொருள் மற்றொரு பொருளின் தன்மையையே தன் தன்மையாகக்கொண்டு நிற்றல் உண்டோ எனின், 'உண்டு' என்பதற்குச் சில எடுத்துக்காட்டுக்கள் தரப்படும். படிகமணி தன்னால் சாரப்பட்ட பொருளின் தன்மையையே தன் தன் மையாகக் கொண்டு விளங்குதல் கண்கூடு. அஃதாவது, படிகம் நீலமணியைச் சார்ந்தபொழுது நீலமாயும், செம்மணியைச் சார்ந்தபொழுது செம்மையாயும் விளங்குகின்றது. "அடுத்தது காட்டும் பளிங்குபோல்" என்றார் திருவள்ளுவ நாயனாரும். படிகத்தின் வண்ணம் (நிறம்) இவ்வாறு சார்ந்ததன் வண்ண மாய் மாறுவதாயினும், படிகத்தின் வண்ணம் என்று ஒரு வண்ணம் (நிறம்) உண்டு என்பதனை மறந்துவிடுதல் கூடாது.

இனி மற்றோர் எடுத்துக்காட்டு; கண், ஒளியைச் சார்ந்த பொழுது ஒளிவடிவாகியும், இருளைச் சார்ந்தபொழுது இருள் வடிவாகியும் நிற்றலும் அனுபவமாய் அறியப்படுவதே. இங்கும் கண்ணின் ஒளி இவ்வாறு மாறுவதாயினும், கண்ணிற்கு என்று ஓர்ஒளி உண்டு என்பதனை மறத்தல் கூடாது. இவ்வாறே பசுவாகிய உயிருக்கு ஓர் அறிவு உண்டு. அந்த அறிவு அறியப் படும் பொருளின் தன்மையாய் மாறுவதாகும் என்பதனை நன்கு உணர்தல் வேண்டும். இதனையே திருவள்ளுவ நாயனார்,

" நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும்; மாந்தர்க்கு
இனத்தியல்ப தாகும் அறிவு"

என்று குறிப்பிட்டுள்ளார். எனவே, 'சார்ந்ததன் வண்ணமாதல்' என்பது உயிரின் தன்னியல்புகளில் முதன்மையானது என்று உணர்க.

(தொடரும்)

# 'அமுதிற்குத் தமிழென்று பேர்'

வித்துவான். திருமதி. ப. நீலா

இயற்கையோடு இயைந்த வாழ்வே இன்பம் தரத்தக்க வாழ்வாகும். இயற்கையில் ஒன்றிவாழ்ந்த தமிழர் குலம் இயற்கையில் கரந்துறையும் இறைத்தன்மையை உணரத் தலைப்பட்டது. வீரம், கோபம், காதல், கொடை போன்ற குணங்கள் வெளிப்பட்டபோது இயற்கை அழகோடு அவைகளைக் கவிதைகளின் கருப்பொருளாக்கிக் கொண்டனர். இந்த அடிப்படையை மனதில் கொண்டால் தமிழ்க் கவிதைகளின் உயரியக்க ஏன்? உயிரியக்க ஆற்றல் தெற்றெனப் புலப்படும்.

**கலைக் கண்கள் :-**

சாதாரண மனிதனுக்கும் கவிஞனுக்கும் உள்ள வேறுபாடு என்ன? பொருள்களைப் பார்க்கும்போது அவை இன்னின்ன பொருள்கள் என்று மட்டுமே சாதாரண மனிதன் உணருகின்றுன். அத்துடன் அவன் சிந்தனை ஓய்ந்துவிடுகிறது. கவிஞனின் கலைக் கண்களோ பிற பொருள்களில் ஒன்றும்போது அவற்றின் அசாதாரணச் சக்தியைப் புரிந்துகொள்பவைகளாக விளங்குகின்றன.

தாயுமான சுவாமிகள் மலர்களைப் பார்க்கிறுர் - மலர்களூடு மலர்ந்துள்ள இறைமையையும் உணருகிறுர் - உடனே கவிதை மலருகிறது.

" பண்ணேன் உனக்கான பூசைஒரு வடிவிலே
பாவித் திறைஞ்ச ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி;அப்
பனிமலர் எடுக்கமனமும் நண்ணேன்'

அன்புள்ளமும் பக்தியுள்ளமும் தான் இத்துணைத் தீவிரமாகச் சிந்திக்கும் ஆற்றலைப் பெற்றிருக்கின்றன.

இதோ ஓர் அன்புள்ளத்தின் சிந்தனை :- காதல் கொண்ட தலைமகள் ஒருத்தி மிகவும் சூடான பொருட்களை உண்ணத்

துயங்குகிறுள். அவள் சொல்லும் காரணம் - அதுதான் அன்புள்ளத்தின் வெளிப்பாடு. உள்ளத்தில் உறையும் தலைவன் திருமேனி நான் உண்ணும் சூடான பொருளால் பாதிக்கப் படுமே! என்று ஏங்குகிறுள் அவ்வேந்திழையாள்.

" நெஞ்சத்தார் காதலவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து."

அன்பு செய்வதில் ஆண் பெண் என்ற வேறுபாடு இல்லை. ஆண்மகனும் தலைவியை உள்ளத்திலே வைத்துப் போற்றும் உயர் பண்பாளனுக நடந்துகொள்கிறுன்.

தலைமகன் ஒருவனின் அன்புக் குரலைக் கேளுங்கள் :- ' என் நெஞ்சத்திலிருக்கும் தலைமகளே! என்னைச் சற்றும் பிரிதல் கூடாது என்று, என் நெஞ்சில் அமர்ந்து இப் பாலைவழியிலும் தொடர்ந்து வருபவளே! சற்றுக்கீழிறங்கி வந்து இங்கே கிடைக்கும் சிறிய புல்லிய நீரை முதலில் நீ குடி. பிறகு நானும் குடிப்பேன். இப்பாலை வழியில் இதுதவிர வேறு தூய நீர் ஏது? இலைகள் விழுந்து அழுகி - நாய் குடித்து மீதமான நீர்தான் என்றுலும் என்னல் தனித்துக் குடிக்க ஒல்லுமோ! என்று தனித்துப் புலம்புகிறுன் தலைவன்.

" வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்
குளவி மொய்த்த அழுகற் சின்னீர்
வளையுடைக் கையள் எம்மொடு உணீஇயர்
வருகதில் அம்ம தானே
அளியளோ அளியள் என்நெஞ் சமர்ந்தோளே "

அவன் காணும் காட்சிகளோ அன்பைப் பிணிக்கும் அழியா ஓவியக் காட்சிகளே. பிடி ஊட்டிப் பின்னுண்ணும் களிற்றையும், பெடைக்கு மென்சிறகால் வீசும் ஆண் புறவையும் - பெண் மானை அமைதிப்படுத்த சின்னீரைக் கள்ளத்தின் உறிஞ்சும் ஆண்மானையும் காணுகின்ற தலைவன் உள்ளம் மேலே சொன்ன முறையில் அல்லாது வேறு எம்முறையில் சிந்திக்கும்?

இனி பக்தியுள்ளம் சிந்திக்கும் பாங்கினைக் காணலாம். நோக்குவ எல்லாம் அவையே போறல் காதலில் மட்டுமல்ல - பக்தியிலும்கூட உண்டு. பார்க்கின்ற பொருளெல்லாம் சிவமாகவே சக்தியாகவே காண்கின்ற பக்தியுள்ளங்கள் நம் நெஞ்சைப் பற்றியுள்ள பாங்கினைப் பாருங்கள்.

**கொன்றை வேய்ந்த செல்வன் :-**

தழைத்து வளர்ந்த கொன்றை மரம் ஒன்று பொன்நிறமான மலர்களைத் தாங்கி எழிலுற்று நிற்கிறது. அதன் பக்கத்தில் முளைத்த கறிக் (மிளகு) கொடி அக் கொன்றையைத் தாவிப் பிடித்துத் தழுவிப் படர்ந்துள்ளது. மரத்தின் அடியிலும் மருங்குகளிலும் வெண் சோற்றுத் திரளோ வெண்ணெயின் தொகுதியோ என மயங்க வைக்கும் முல்லைப் பூக்களின் மனோகரமான மலர்ச்சி. இக் காட்சிகளை நாம் கண்டுகொண்டிருக்கும்போதே எங்கிருந்தோ ஓடிவந்த கரடி ஒன்று அம் முல்லைப் புதருள் சரணடைந்து உறங்கத் துவங்குகிறது.

பொருளைப் பொருள் என்று மட்டும் உணரும் நமது புல்லிய அறிவுகொண்டு அல்லவா நாம் இக் காட்சியைக் கண்டோம். அதனால் நம் சிந்தனையும் இத்துடன் நின்றுவிடுகிறது.

நம்மோடு - நம்மருகே - நமது விழிப்புலன்களுக்குப் புலனாகாமல் நின்றுகொண்டிருக்கிற மாதவச் சிவஞான சுவாமிகளும் இக் காட்சியைக் காண்கிறார். அவர் உள்ளம் கவிஞரின் உள்ளம். ஆகவே கற்பனை என்ற தேனிலே இக் காட்சியாம் கற்கண்டை தோய்த்துச் சுவைக்கிறார்.

" தாமின் புறுவ துலகின்புறக் கண்டு
காமுறுவர் கற்றறிந் தார் "

என்றபடி நமக்கும் அதனைச் சுவைக்கத்தருகிறார். கரும்பயிறற்குக் கூலியா தேவை ?

" சுற்றெல்லாம் மலர்முல்லை ததைந்து
பெருந்தூறுசெய வதன்கீழ் எண்கு
பற்றிநுழைந் துறங்க நடுவளர் கொன்றைமிசைக்
கறிதாய்ப் படருந் தோற்றம்
முற்றரக்கன் வெள்ளிமலை எடுத்தநாள்
வெரீஇத் தழுவும் உமையாளோடும்
கற்றைவார் சடைப்பெருமான் நின்றநிலை
காட்டுவதும் உண்டா லாங்கண். "

கொன்றைமரம் கனகச் சடைவிரித்த கண்ணுதலான். பற்றிப் படர்ந்துள்ள கறிக் கொடி மலையத்துவச பாண்டியனின் குலக் கொடி பார்வதிதேவி. முல்லைப்புதர் முழுநிலவின் வெண்மை விஞ்சும் வெள்ளிமலை. பதுங்கி நுழைந்த கரடியோ - பரமனைப்

பெயர்க்கவந்த இலங்கை வேந்தன் என்று இக் காட்சியை இலக்கிய ஏட்டில் அழியாமல் பதித்துவிட்டார் சிவஞான சுவாமிகள்.

இன்னொரு புலவர் கயிலைக் குன்றுதனைப் பெயர்க்கவந்த இராவணன் முதுகில் நன்றி உணர்ச்சியால் தட்டிக்கொடுக்கிறார். காரணம் ஆறணிந்த கடவுளும் அழகுமலை வல்லியும் சிறுஊடல் கொண்டனராம். பருப்பதம் தந்த பாவை, பெருமானைப் பாராமல் ஒதுங்கி அமர்ந்திருந்தாள். அருவி இழியும் கயிலையை அரக்கன் பெயர்க்கத் தொடங்கினான். மலை ஆடியது. பெருமாட்டி பயந்துவிட்டாள். உலகுடைநாயகி ஊடலை மறந்து பெருமானின் அணியாகத்தை ஆரத்தழுவிக்கொண்டாள். நன்றி சொல்லத்தானே வேண்டும் அறம்புகா கோட்டைசூழ் அணி இலங்கை வேந்தனுக்கு.

" அருவியங் குன்றம் அரக்கன் பெயர்ப்ப
வெருவிய வெற்பரையன் பாவை — பெருமான்
அணியாகம் ஆரத் தழுவினாள் தான்முன்
தணியாத ஊடல் தணிந்து."

சிந்தனைச் சிப்பிக்குள் இருந்து வெளிவரும் செந்தமிழ் முத்துக்கள்தான் எத்தனை எத்தனையோ !

( விரியும் )

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

### Sri Veeratteswaraswami Devasthanam, Korukkai.

புரசைத் திருநெறிக் கழகத்தின் ஆதரவில் யாங்கள் 60 பேர் 19—5—66 வியாழன் மாலை கொறுக்கை ஸ்ரீ வீரட்டேஸ்வரர் ஆலயத்தில் வழிபாடு செய்தோம். தேவஸ்தான நிருவாகிகள் எங்களது வழிபாட்டை உடனிருந்து சிறப்பாக நடத்திவைத்தனர். ஆலயம் மிக்க தூய்மையாகவும் கவர்ச்சிகரமாகவும் உள்ளது. வழிபாட்டினை நிகழ்த்திவைத்த அனைவருக்கும் நன்றி.

(Sd.) க. வடிவேலாயுதனார்,
தலைவர், 19—5—66
துணைத் தமிழ்ப்பேராசிரியர்,
சென்னை கிறிஸ்தவக் கல்லூரி
தாம்பரம்.

(Sd.) செ. சுந்தரன்.
செயலன்.
43. முருகப்பமுதலி தெரு,
புரசை, சென்னை.

# தையல்நாயகி அந்தாதி

## [ மூலமும் உரையும் ]

*( மலர் 24, இதழ் 12, பக்கம் 685ன் தொடர்ச்சி )*

**அம்பிய தாமடி யார்பவ வாரி யகன்றரிய**
**கம்பமில் வான்கரை யேறச்செய் கின்றதாற் காரணியே!**
**வெம்பிப் பலபிணி யாலுன் றிருவடி வெஃகி மன**
**நம்பின னீந்தரு ளாய்தைய னாயக நாரணியே.** 14

( இ - ள் ) உலகத் தோற்றத்திற்கே காரணமாக விளங்குபவளே, தையல் நாயகம் எனும் நாமமுடைய நாரணியே! தோணித் தொழில்பூண்ட தொண்டர்தம் பிறவிப் பெருங்கடலாகிய இடத்தினின்றும் நீங்கி அரிய நடுக்கமில்லாத சிறந்த (சீரிய) முத்தியெனுங் கரையேறச் செய்கின்றது (தேவரீருடைய திருவடி). பழவினை காரணமாக வந்த பலநோய்களாற் பிணிப்புண்டு வருந்தித் தேவரீருடைய திருவடிகளையே விரும்பி மனவுறுதியுடன் நம்பிக்கை பூண்டுளேன். ஆகையினால் அருள் கூர்ந்து திருவடி தந்தாண்டருள்க எ - று.

( கு - ரை ) அம்பி - தோணி, வான்கரை - முத்தியங்கரை (மோட்சம்) பவம்வாரி - பிறவிப்பெருங்கடல், வெஃகி - விரும்பி

**நாரா ருனகழல் அன்றியேற் காப்பவர் நண்ணிலரால்**
**சீரா யறிந்து திருவடிக் கேதுதி செப்பிநின்றேன்**
**காரார் குழலருட் கண்முகங் காட்டிக் கரிசறவே**
**வாராய் அடியன்முன் னேதைய னாயகி வாழ்ந்திடவே.** 15

( இ - ள் ) அன்பு நிறைந்த தேவரீருடைய திருவடிக் காப்பின்றி அடியேனைப் பாதுகாவல் புரிபவர் ஒருவரும் பொருந்திலர். (ஆகையினால்) தக்கவாறுணர்ந்து நுந்திருவடியிணைகட்கே போற்றுதல் புரிகின்றேன். தையல்நாயகியாந்தாயே! நீ, கருமை பொருந்திய கூந்தலினையும் கருணைபொழியும் கண்களினையும் புன்னகையொடுற்ற இனிய முகத்தினையும் அடியவன் முன் தரிசிக்கும்படிச் செய்து முக்குற்றங்களும் ஒழிந்தின்புற்று வாழும்படி வந்தருள்புரிவீராக எ - று.

( கு - ரை ) நார் - அன்பு, நண்ணல் - பொருந்துதல், கார் - கருமை. கரிசு - குற்றம் (பிறவிப்பிணி). குழல் - கூந்தல். சீராய் உணர்தல் - தக்கவாறு அறிதல். அற - நீங்க (ஒழிய.) அடியன் - அடிமைப்பட்டுத் தொண்டுபுரிபவன்.

வானுள வேண்டிலன் பொய்யா முலகத்தின் வாழ்வை யெண்ணேன்
நானு விதசுக போகவின் பத்தையும் நானுகவேன்
தேனுர் திருவரு ளேநச்சி யிங்குத் திரிகின்றனன்
ஆனு மதியுடை யாய்தைய னுயகி யாண்டருளே. 16

(இ - ள்) விண் உலகினை யாட்சிபுரிய விரும்பிலேன். பொய்ம்மையே நிறைந்த இம்மண்ணுலக வாழ்க்கையினையும் கருதிலேன். பலவகையான இன்ப நலன்களையும் அடியேன் மகிழ்ந்தேற்கிலேன். என்றும் நீங்காத ஞானமய முடையவரே! தையல்நாயகித் தாயே! தேன்போலும் இனிய தேவரீருடைய திருவருளினையே விரும்பி இவ்வுலகில் பேய்போல் அலைகின்றேன். (இந்நிலை திருவுளம்பற்றி, ஆண்டருள்க) எ - று.

(கு - ரை) வான் - விண்ணுலகம். பொய்யாம் உலகு - மண்ணுலகம். உகவேன் - விரும்பேன்; நச்சுதல் - விரும்பல், ஆனு - நீங்காத, திரிதல் - அலைதல். நானுவிதம் - பலவகை. எ - று.

ஆண்டகை யான வயித்தியன் நின்மண வாளனென்றால்
நீண்ட புகழுடை யாய்நீ வயித்திய நேருணர்வாய்
ஈண்டு பவப்பிணி தீரநல் லோடதி யீந்தளியாய்
வேண்டினன் இன்றுனை யேதைய னுயக மெல்லியலே. 17

(இ - ள்) பேரருளாளனுகிய மருத்துவன் தேவரீருடைய நாயகன் என்ற காரணத்தால் நீ பெரும்புகழுடையை; அதுவல்லாமலும் மருத்துவச் செயலும் நன்ருக அறிவை; இவ்வுலகில் பலவகையாக வந்து நெருங்கிய பிறவிநோய் ஒழிய நன்மருந்து நல்கியருள்வாய். தையல் நாயகமாகிய மென்மைத் தன்மையுடையவளே! தேவரீரையே இப்பொழுது வேண்டியுள்ளேன் எ - று.

(கு - ரை) பவப்பிணி - பிறவிநோய். ஓடதி - மருந்து. ஆண்டகை - ஆளுந்தன்மையுடையான். தீர - விட. நீண்ட புகழ் - பெரும்புகழ். நேர்தல் - சமமாதல் (ஒன்ருதல்). ஈண்டுதல் - பலவகையாக வந்துசேர்தல். இன்று - இப்பொழுது.

மெல்லினம் வல்லின மேவுந் திருவருண் மேனியிலே
கல்லடித் தாளையுங் காத்தல்செய் தாயன்று காதலுற்றே
சொல்லடி தோறுஞ் சுவைபெறச் சாத்தேற்கென் றய்மை செயாய்
அல்லடித் தார்குழ லாய்தைய னுயக மாகனையே. 18

(இ - ள்) இருளாகிய பொருளையொத்த மாலையணிந்த கூந்தலினை யுடையவளே! தையல்நாயகம் என்கின்ற தாயே! மென்மைத் தன்மையும் உண்மைத் தன்மையும் பொருந்திய

நினது திருவருளாகிய திருமேனியின்கண் கற்கொண்டு வீசி யெறிந்தவனையும் (சாக்கிய நாயனரையும்) காப்பாற்றியருளினய். அக்காலத்து காதல் வைத்து ; (அல்லது) காதல் கூர்ந்து சொல்லப்பெறும் பாவின் அடிதோறும் சொற்சுவையும் பொருட்சுவையும் தோயும்படிச் சாத்தும்படி அடியேற்குத் தூய்மைசெய்து அருளுகின்றினை என்னை (யாதுகாரணம்) ஆகையினுல் பாமாலை சூட்டற்கு வளராது தூய்மைசெய்தருளல் வேண்டும் என்பதாம் எ - று.

(கு - ரை) அம்மையின்றிருமேனி மெல்லினமும் ஐயன்றிருமேனி வல்லினமும் ஆகக்கொண்டு கூறப்பட்ட நிலை அர்த்தநாரீச்சுர வடிவினையாம். மென்மைத் தன்மைத்தாய இடையினையும் வல்லெனும் தோடு கருவினையொத்த கொங்கையினையும் உடைய திருமேனியுடையவர் எனலுமொன்று. இப்பாட்டில் மூவினமும் பொருந்தியதாக்கோடல் வேண்டும். அன்பினையடிப்படைக்கொண்டுள்ளது. சாக்கிய நாயனர் வீசியெறிந்தகல் அதற்குக் காவல் புரியப்பட்டது. அன்னை அனையெனலாயது, தூய்மை - சொற்குற்றமும் பொருட் குற்றமும் இன்றியிருத்தல்.

ஆகம வேதபு ராணப் பொருளா யமர்ந்தவளே !
வாகம ரும்வயித் தீசர்க்குகந்தருண் மாமருந்தே
சோகமொ ழித்துன் றிருவரு ளிந்து துலங்கவைப்பாய்
தாகம தாமளிப் பாய்தைய லுயகத் தண்ணமுதே !

(இ - ள்) சிறப்பு நூலெனப் பெறும் ஆகம நூல்களும் பொதுநூல் எனப்பெறும் வேதநூல்களும் பழைய வரலாற்றினைப் பகரும் புராண நூல்களும் ஆகியவற்றில் அமர்ந்து உட்பொருளாய் விளங்குபவளே ! அழகாகப் பொருந்திய வைத்தியநாதப்பெருமானுக்கு உகந்து அருள்பெருமருந்தாகியவளே! தையல்நாயகியாகிய குளிர்ச்சி பொருந்திய அமிருதத்தாயே ! அடியேனுடைய சோகமெனும் துன்பத்தினை நீக்கித் தேவரீருடைய திருவருள்ஞானம் அளித்து அவ்ஞான வொளியிடை விளங்குமாறு வைத்தருள்வதோடு மோட்சமெனும் ஆசையினையும் அளித்தருள்வாய். எ - று.

(கு - ரை) ஆகமம், மூலாகமமும் உபாகமமும். வேதம் - வேதமும் உபவேதமும், புராணம் - காந்தம் சைவம் கூர்மம் முதலிய 18 புராணங்களும் உபபுராணங்களும் ஆம். துலங்கவைத்தல் - விளங்கவைத்தல். தாகம் - ஈண்டு மோட்சதாகம். அமர்ந்து - விரும்பி.

தண்ணளி வேண்டித் தவம்பல வாற்றித் தரையிடத்தே
யெண்ணரி தாகிய ஞான முனிவர ரேய்த்திருக்கப்
பண்ணில னங்ஙன மேற்கெளி தாவந்து பாலித்தநின்
கண்ணருட் கேது நிகர்தையல் நாயகக் காரிகையே. 20

(இ - ள்) இப்பூமியினில், தையல் நாயகம் எனச் சிறப்பித்து ஓதப்பெறும் கட்டழகினையுடைய அம்மையே! தேவரீருடைய குளிர்ந்த கருணையினைப் பெறுவான் விழைந்து பல தவங்களைச் செய்து எண்ண முடியாத (அளவில்லாத) அறிவுடை முனிபுங்கவர்கள் (திரளாகவந்து) சந்நிதானம் வந்து காத்து நிற்கவும், அவர் தமக்கருள்புரியாமல் அம்முனிவர்போல் தவஞ்செய்து வருந்ாதவனாகிய எளியேற்கு எளிதாக வந்து கருணை வழங்கிய நின் அருட்பார்வைக்கு ஒப்பாவது யாது. ஒன்றுமிலது எ - று.

(கு - ரை) முனிவரர் - முனிவருக்குள் மேலானவர். தரை-பூமி, எண்ண அரிது எண்ணரிது எனவாயது. பாலித்தல் - வழங்கல். வேண்டி - விரும்பி. ஆற்றல் - செய்தல்.

காரிகை கற்றுக் கவிபல கூறிலென் கானலியப்
பாரில் வலம்வந்தென் றீநா வினின்று பரிவிறவஞ்
சீரிற் புரிந்துமென் சேவடி யேத்திநிற் சிந்தித்திடார்
காரிற் கறுத்த குழற்றையல் நாயகக் கற்பகமே. 21

(இ - ள்) கரிய மேகம்போன்று கருமையுற்ற கூந்தலினையுடைய தையல்நாயகம் எனப்பெற்ற கற்பகமே! சகல சம்பத்துக்களையும் வந்து சிந்தித்தவர்க்கு எளிதில் அருளும் தேவரீருடைய செவந்த திருவடிகளைச் சிந்தனை பண்ணாதவர்கள் யாப்பருங்கலக்காரிகை முதலிய நூல்களைக்கற்று நாற்கவிகளையும் சுவைபொருத்தப் பாடினால் வருவது என்னே? கால்களானவை ஓய்வுற்று வருந்த பூமியாக வலம் வருவதால் வரும் பயன் யாது? அதுவேயுமன்றி பஞ்சாக்கினியின் நடுவில் நின்று இன்பில்லாத தவங்கள் பல சிறப்புப்பொருந்திய முறையில் ஆற்றினாலும்வரும் நலன்கள் யாவையோ! ஒன்றும் வருவதில்லை என்பது போந்த பொருள்.

(கு - ரை) பூமிவலம் வரலும் கவிபலபாடலும், ஐந்தீநாப் பண் இருந்து தவம்புரிதலும் சிறப்புடைத்தாயினும் சேவடி சிந்தியாதவர்கட்கு முத்திநலங் கிட்டாது என்பது கருத்தாயிற்று. கற்பகம் - சிந்தித்தவற்றினைக் கொடுப்பது. பரிவு - துன்பமும் இன்பமுமாம்; ஈண்டு துன்பம். நா - நடு. எவன் என்பது என் என வந்தது. (தொடரும்)

# வேலூர் தேவஸ்தானம் இந்து அனாதைக் குழந்தைகள் விடுதி

# பதிமூன்றாவது ஆண்டு நிறைவு அறிக்கை

( இதழ் 6, மலர் 25, 247-ஆம் பக்க தொடர்ச்சி )

## முயற்சியின் வளர்ச்சி

1966-ம் ஞு ஜனவரி, இன்று இருக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை 20, விடுதியின் வளர்ச்சியை அறிந்துக்கொள்ள, அதுவும் குழந்தைகளின் உடல், உள்ளம் எதிர்கால வளர்ச்சி அறிய அனைவரும் விரும்புவார்கள் அல்லவா! அவர்களுக்கு ஏற்பட்ட வளர்ச்சிகளையும், தெய்வ அருள் பெற்றதையும் பிறருக்கு அறிவிப்பதில் எங்களுக்கும் விருப்பம் இருக்குமல்லவா! விடுதியின் குழந்தைகள் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மணிவாசகர் என்ற முறையில் அவர்கள் திறமைக்குத் தகுந்தவாறு நான்கு பிரிவாக பிரிக்கப்பட்டுள்ளனர். அப்பர் பிரிவுக்குக் கல்வி, கலாச்சாரம், சம்பந்தர் பிரிவுக்கு தொழில், தோட்டம். சுந்தரர் பிரிவுக்கு சுகாதாரமும், மணிவாசகர் பிரிவுக்கு உணவு என்ற வேலைகள் பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த நான்கு பிரிவுக்கும் தலைவர்கள் உண்டு. அவர்கள் வேலைத் திறமைக்கு தகுந்தவாறு பிரித்துக்கொடுக்கப்படும்.

கல்விப்பிரிவின் வேலைகள் :- நேரத்தில் படிப்பது, பள்ளி பாட வேலைகள் செய்வதைக் கவனிப்பது, கல்வி சம்பந்தமான சாமான்களை சுத்தமாக வைத்துக்கொள்வதைக் கவனிப்பதுமாகும். கலாச்சாரப் பிரிவின் வேலைகள் ;- விழா நாட்களில் நடைபெறும் கலை நிகழ்ச்சி, விடுதியை அலங்கரிப்பது, தெய்வப் பாடல்களைப் படிக்கச்செய்வது, விடுதியின் பிரார்த்தனையைக் கவனிப்பதுமாகும். தொழில் பிரிவின் வேலைகள் :- கிசான்ராட்டை நூற்பது, பஞ்சுகொடுத்துச் சிட்டம் வாங்குவது. லீவு நாட்களில் தையல் வேலைகளைக் கவனிப்பது. தோட்டப் பிரிவின் வேலைகள் :- தோட்டச் செடிகளைப் பாதுகாத்தல், தோட்டச் சுத்தம்செய்தல் விதைகளைக் கவனித்து எடுத்து வைத்தல். சுகாதாரப் பிரிவின் வேலைகள் :- குழந்தைகளின், உடல், உடைகள், விடுதியின் சுத்தம் கவனிப்பது. உணவுப் பிரிவின் வேலைகள்:- நேரத்தில் உணவு உண்ண ஏற்பாடு செய்தல், உணவு உண்ணும் பாத்திரச் சுத்தம். பரிமாறுதலைக் கவனிப்பது, சமையலுக்கு வேண்டிய வேலைகளைக் கவனிப்பதுமே ஆகும்.

ஒவ்வொரு பிரிவிலும் மாறுதல் உண்டு. குழந்தைகளுக்கு
பொறுப்பை அதிகமாக அளித்து விட்டார்களே அவர்களுக்குப்
படிக்க, பள்ளி செல்ல, நேரமுண்டா? என்று கேள்வி எழலாம்.
அவர்களுக்கு குறிப்பிட்ட நேரப்படி எல்லாம் நடந்துவருகிறது.
விழா என்ற காரணத்தாலோ, உடல் நலக்குறைவாலோ நேரங்
களில் மாறுதல் இருக்கலாம். குறிப்பிட்ட நேரங்களில் வேலை
நடைபெறுவதால் அவர்களுக்கு வம்பு சண்டையிட நேரம் இருப்
பதில்லை. காலை 5 மணிக்கு தெய்வசிந்தனையுடன் எழுந்து.
$6\frac{1}{4}$ வரை படிப்பு. $6\frac{1}{4}$-$6\frac{3}{4}$ வரை உடல், உடை, பல்சுத்தம்.
$6\frac{3}{4}$-$7\frac{1}{2}$ வரை தோட்டத்திற்குச்சென்று பூ எடுத்து, தொடுத்துக்
கோவிலுக்கு பூஜைக்கு அளித்தல். $7\frac{1}{2}$-$7\frac{3}{4}$ பிரார்த்தனை. $7\frac{3}{4}$-$8\frac{1}{4}$
காலை உணவு. $8\frac{1}{4}$-$9\frac{1}{4}$ நூல் நூற்றல். $9\frac{1}{2}$ பள்ளிக்குச் செல்லு
தல். 1 மணிக்கு மதிய உணவு. $1\frac{3}{4}$ பள்ளிக்குச் செல்லுதல்.
$4\frac{1}{2}$ பள்ளியிலிருந்து திரும்புதல். $4\frac{3}{4}$ சிற்றுண்டி. $4\frac{3}{4}$-$5\frac{1}{2}$ தோட்ட
வேலை. $5\frac{3}{4}$-$6\frac{1}{4}$ பிரார்த்தனை. $6\frac{1}{4}$-$6\frac{3}{4}$ கோவிலில் வழிபாடு.
$6\frac{3}{4}$-$7\frac{1}{2}$ தேவாரவகுப்பு. 8 இரவு உணவு. 8-$9\frac{1}{2}$ பள்ளிப்பாடங்கள்
படித்தல் $9\frac{1}{2}$ படுக்கைக்குச் செல்லுதல். லீவு நாட்களில் காலை 9-
$10\frac{1}{2}$ தோட்டவேலை. $10\frac{1}{2}$-12 கைத்தொழில் அல்லது மதபோதனை
மாலை 4-6 விளையாட்டு. 5 வயதிலிருந்து 8 வயதுக்குட்பட்ட
குழந்தைகள் காலை $6\frac{1}{2}$ படுக்கையை விட்டு எழுந்து இரவு $8\frac{1}{2}$
படுக்கைக்கு செல்வார்கள். இதனால் கல்வி பாதிக்கப்படுவதில்லை
என்பதை அறியலாம். குறிப்பிட்ட வேலை நேரத்தால் ஒழுங்
கோடும், கட்டுப்பாட்டோடும், கட்டுப்பாடுள்ள சுதந்திரத்
தோடும், ஒற்றுமையோடும், பொறுமையோடும், மனமகிழ்ச்சி
யோடும் வாழ்கிறார்கள்.

மற்றும் குழந்தைகளிடம் பொறுப்பைக் கொடுத்து கவனிக்
கச் செய்வதால் கொடுத்தவர்களிடம் நம்பிக்கையும், அன்பும்
விடுதி தன்வீடு என்ற பாசமும் ஏற்படுவதுடன் நன்றாக
பொறுப்பாக எதையும் கவனிக்கக்கூடிய எதிர்கால வாழ்வுக்கு
வேண்டிய மனப்பக்குவமும் பொறுப்பும் ஏற்படுகிறது. என்பது
விடுதியை விட்டுச் சென்று வாழ்பவர்கள், வாழ்க்கையிலிருந்து
கண்ட அனுபவம். விடுதியை விட்டு அவர்கள் சென்றாலும், விடு
திக்கு வந்தால் தன்வீடு என்ற பாசத்தோடு யாவற்றிலும்
கலந்து கொள்ளுகிறார்கள். குழந்தைகளுக்குக் கட்டுப்பாடு
கூடாது, அவர்களைச் சுதந்திரமாக இருக்க விடவேண்டும்
என்பது சிலர் கருத்து. கட்டுப்பாடும் வேண்டும், சுதந்திரமும்
வேண்டும். சுதந்திரம் கொடுக்க வேண்டியதுதான் எதற்கு
அளித்தால் நன்மையோ அதற்கு அளிக்க வேண்டும். ஓர்
சிறுவன் மரத்தின் மீது ஏறுகிறான் அவனுக்கு அதில் ஓர் அளவு

திறமை இருக்கிறது. திறமை இருந்தும் தடுக்கிறோம். ஏன்? அவன் துன்பப்படுவானே என்றுதான். அவன் அப்பொழுது விரும்புவது சுதந்திரமாக அதைச் செய்யவேண்டும் என்று தானே. அதனால் ஏற்படும் பலனை அவன் அனுபவிக்கும்போது தவிக்கிறான். இதைத்தடுப்பது வளர்ப்பவர்களின் கடமை. உடலில் கட்டி ஏற்படுகிறது. உடைய கைவைத்தியமும் பச்சிலை வைத்தியமும் செய்கிறோம், அதற்கும் கட்டி அசையா விட்டால் கத்தி கொண்டு அறுத்துப் புண் ஆறுவதற்கு மருந்து தடவி ஆற்றுகிறோம். அதைப்போல் குழந்தைகள் தவறு செய்தால் அன்பு வார்த்தைக்கும், அடங்காதவர்களைக் கடுமையைக் கடைப்பிடித்து பிறகு அவர்களை மருந்தைப் போட்டுப் புண் ஆற்றுவது போல் அன்புச்சொல்லால் தவறை எடுத்துக்கூறித்திருத்தவேண்டியிருக்கிறது. அறுபட்ட இடத்தில் வடுமாற பலநாட்கள் ஆகும். அது போல் அவர்கள் மனமும் அந்த அனுபவத்தை எளிதில் மறந்து விடமாட்டார்கள். கத்திகொண்டு அறுத்துக் கட்டியைப் போக்கியது உடல் நன்மைக்கு. அதுபோல் கடுமையும். நயமான சொல்லும் உள்ளத்திற்கு நன்மையைக் கொடுக்கச் செய்கிறது. சில குழந்தைகள் சுதந்திரம் கொடுத்தால் தவறான வழிகளில் மனம் சென்று செய்கையில் காண்பிக்கும்போது சுதந்திரத்தில் கட்டுப்பாடு அளிக்கவேண்டும்.

நயமான அன்புமொழியோடு தவறை எடுத்துத் திருத்தும்படி சொன்னால் திருந்துவோர் சிலர். நயமான அன்புமொழிக்குக் கட்டுப்படாமல் (கத்தி கொண்டறுத்துப் புண்ஆற்றும் படியான நிலை) கடுமையான வார்த்தைக்குக் கட்டுப்படுபவர்களும் உளர். கொடுத்தால் எல்லாவற்றிலும் சுதந்திரம் கொடுப்பதும் இல்லை எல்லாவற்றிலும் கட்டுப்பாடு அளிப்பதாலும் அவர்களிடம் பிடிவாதமும் முன்கோபமும். முரட்டுத்தனமும் வளர்ந்து விடுகிறது. பிடிவாதத்தால் தாங்கள் நினைத்தது ஈடேறா விட்டால் அவர்களுக்குப் பொறுப்புணர்ச்சி ஏற்படுகிறது. இதனால் அவர்கள் எதிர்கால வாழ்வுக்குப் பல இடையூறுகள் ஏற்பட்டு, எதையும் தாங்கக் கூடிய மனப்பக்குவம் ஏற்படாமல் இருப்பதைப் பலருடைய வாழ்விலிருந்து அறிந்து கொள்ளலாம். விடுதியில், பல சூழ்நிலையில் வளர்ந்தவர்கள் வந்திருப்பதால் அவர்களுக்கு கட்டுப்பாடுடன் கூடிய சுதந்திரவாழ்வு அளிக்கப்பட வேண்டியிருக்கிறது. அவர்கள் கடமைகளிலும் தவறான பிடிவாதத்திற்கும் கட்டுப்பாடு உண்டு. உணவு விஷயத்திலும், விழா நாட்களிலும், மற்ற யாவற்றிற்கும் அவர்கள் விருப்பம்போல் நடைபெறும். சிறுவர்களாக இருந்தாலும் அவர்கள் கூறும்

நல்யோசனைகளுக்கும் மதிப்புண்டு. விழா நாட்களில் எல்லா வேலைகளுக்கும் ஓய்வு அளிக்கப்பட்டு அவர்கள் விருப்பப்படி நடப்பார்கள். சுதந்திரமா? கட்டுப்பாடா? அல்லது சுதந்திரம் நிறைந்த கட்டுப்பாடா? என்பதைப் படிப்பவர்களுக்கே விட்டு விடுகிறோம்.

## மன வளர்ச்சி

விடுதியில் வளர்ந்த கட்டுப்பாடுள்ள சுதந்திரத்தால் வாழ்வில் வளர்ச்சியடைந்த ஓர் பையனின் வளர்ச்சியைப்பற்றி அறிவிப்பது எங்கள் விடுதியின் கடமையல்லவா! தாயில்லை, தந்தை இருந்தும் அப்பையனுக்குள்ள ஓரளவு முரட்டுத்தனத்தால் தந்தையின் ஆவாவை இழந்தான். ஊர்வம்புடன் பள்ளி செல்லாமல் அடம் செய்யும் அடங்காப்பையனை அவரால் அடக்க முடியாமல் விடுதியில் கொண்டுவந்து சேர்த்தார். 1954-56இல் இருந்த விடுதி கண்காளிப்பாளர் அவன் செய்யும் முரட்டுத்தனம், விஷமம் தாங்காமல், தண்டனைகள் அளித்தும் அடங்காமல் படிக்காமல் பள்ளியிலும், தொல்லை கொடுத்து வந்தான். 1956 ல் வந்த கண்காணிப்பாளர் அவனிடம் ஏன் யாவரையும் விட அதிகமான முரட்டுத்தனம், பிடிவாதம் இருக்கக் காரணம் என்ன என்று அறிய அவனையும், அவன் தந்தையையும் மற்றவர்களையும் விசாரித்ததில் அவன் உள்ளம் அன்பான ஆதரவுக்கு ஏங்கி, தாயன்பை இழந்தும், தந்தையின் ஆதரவும் கிடைக்காததால், வெறுப்பால், கோபமும், முரட்டுத்தனமும் அதிகமாக உண்டாகிவிட்டது. இவனை அன்பு சொல்லால் திருத்தி, அவனுக்குப் பொறுப்பைக் கொடுத்து வாழ்வில் நம்பிக்கை உண்டாக்கி, அவனுக்கு உள்ள வெறுப்பைப் போக்கவேண்டும்.

வெறுப்பு நீங்கினுல், முரட்டுத்தனம், பிடிவாதம் நீங்கும். கொடுத்த பொறுப்பால் தன்னம்பிக்கை ஏற்படும். தன்னம்பிக்கையால் வாழ்க்கையில் நம்பிக்கை ஏற்பட்டு பொறுப்போடு நடந்துகொள்வான். அவனைத்திருத்தலாம்என்று எண்ணி செய்யப்பட்டது. அகிலத்துநாயகி தையல் நாயகியின்குழந்தை அல்லவா! நன்மை அளித்தது; அதிககல்வி இல்லாவிட்டாலும் ஒழுங்காக பள்ளிசென்றுபடித்தவகுப்புகளில் வெற்றிபெற்ருன். விடுதியில் கொடுத்த பொறுப்புக்களை ஒழுங்காகச்செய்து பொறுப்போடும்நடந்துகொண்டான். இன்றுஒழுக்கமானநேர்மையோடு கூடியவனுக சொந்தத்தில் டீ கடைவைத்து சிறுதொகைசேர்த்துக் கொண்டு நல்லவனுக வாழ்ந்து வருகிருன். குழந்தைகளை, குழந்தைகள் என்று எண்ணுமல் பொறுப்பைக் கொடுத்து

அன்போடும் நம்பிக்கையோடும் நடந்தால் அவர்களுக்குப் பொறுப்பு வருவதுடன் நம்மிடம் நம்பிக்கையும், பாசமும் ஏற்படும். சிலசமயம் அவர்கள் தவறு செய்யும்போது நயமான வார்த்தைகளுக்கு கட்டுப்படாமலிருக்கும்போது நாம் கண்டித்து திருத்தினல் நம்மிடம்கொண்ட நம்பிக்கையால். வெறுப்பு ஏற்படுவதில்லை. தவறை உணர்ந்து திருந்துகிருர்கள். அவர்களிடம் பொறுப்பைக்கொடுத்து நம்பிக்கைகொண்டு நாம் பாசம் செலுத்தவேண்டும். அதனல் நமக்கு திருப்தி கிடைக்கிறது. விடுதியிலுள்ள சிப்பந்திகளும் குழந்தைகளை அன்போடு தன் குழந்தைகளாக கருதி நடத்தவேண்டும் என்ற கருணை உள்ளத்தால் அவர்களையும் அநாதைகளாக நியமித்துள்ளார் போலும். லக்ஷ்மணன் என்பவன், இன்று நான் தீய பழக்கங்கள் இல்லாமல், நேர்மை தவருமல் இருப்பதும் நேரத்துடன் என் வேலைகளை கவனிப்பதும் சிக்கனத்துடன் இருந்து சிறு தொகையாக 1000 ரூபாய்க்குமேல் வைத்திருப்பதற்கும் காரணம் தையல் நாயகியின் அருளும், சந்நிதானத்தின் ஆசியும், முக்கியமாக விடுதியின் கட்டுப்பாட்டு சுதந்திரமும்தான் என்று கூறுகிருன். சென்றவர்கள் இன்று மேற் சொன்ன அப்பையனைப்போல்தான் வாழ்ந்து வருகிருர்கள்.

( தொடரும் )

---

உ

## "ஞானசம்பந்தம்"

## சந்தாதாரர்களுக்கு ஓர் வேண்டுகோள்

"ஞானசம்பந்தம்" திங்களிதழ் 24 ஆண்டுகளாகச் சைவமும் தமிழும் பரப்பிவருவது உலகம் அறிந்தது. தற்பொழுது இருபத்தைந்தாம் ஆண்டிலும் சமயப்பொருள், இலக்கணம், இலக்கியம் முதலியவற்றுடன் தெளிவான கட்டுரைகளை வெளியிட்டுவருகிறது. தாள் விலையேற்றம் முதலிய தவிர்க்கமுடியாத காரணங்களால் சந்தாத் தொகை சிறிது உயர்த்தப்பட்டுள்ளது. சந்தாதாரர்கள் இச்சிறு சந்தா உயர்வை ஏற்றுச் சந்தா செலுத்தி, "ஞானசம்பந்தம்" பெற்றுப் பயன் பெறுவார்களாக.

---

**ஆண்டுச் சந்தா :- உள்நாடு ரூ. 3—00 வெளிநாடு ரூ. 4—00**

---

செயலாளர்: "ஞானசம்பந்தம்" காரியாலயம், தருமையாதீனம், மாயூரம் அஞ்சல், தஞ்சை மாவட்டம்.

# செய்திகள்

## தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீஸ்வரர்கோயில் மகோற்சவம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜைவிழா

தருமையாதீனம் ஸ்ரீ ஞானபுரீஸ்வரசுவாமிகோயில் மகோற்சவம் 31—5—66 செவ்வாய்க்கிழமை தொடங்கி 9—6—66 வியாழக்கிழமை முடியப் பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. திருக்கோயில், பந்தல் மின்விளக்கு விதானம் முதலியவற்ருல் அலங்கரிக்கப்பெற்றிருந்தது. சிவாகம விதிப்படித் திருவிழா நாட்களில் பெருமானுக்கு விசேஷ அபிஷேக அலங்கார ஆராதனைகள் நடைபெற்றன. நாடோறும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்குப் பிரசாதங்கள் வழங்கியருளினுர்கள். அன்பர்கள் பலரும் வந்திருந்து வழிபாடாற்றி இன்புற்றனர்.

விழாநாட்களில் வீதியுலாவில் வேத சிவாகம பாராயணம், பண்ணிசைவாணர்களின் பண்ணிசை பாராயணம், விசேஷ நாதஸ்வர இன்னிசை முதலியனவும் சிறப்புற நடைபெற்றன,

### திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு :

31—5—66 முதல் 10—6—66 முடிய திருத்தருமையாதீன மடாலய திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் " திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடு " நடைபெற்றது. 31—5—66 செவ்வாய்க்கிழமை தோத்திரத் திருநாள். தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், சிரோமணி, வித்துவான், திரு. வி. சுபேசன் 'தேவாரச் சிறப்பு'ப் பற்றியும், தருமையாதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியை, வித்துவான், திருமதி. ப. நீலா 'திருவாசகச் சிறப்பு'ப் பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

1—6—66 புதன்கிழமை சாத்திரத் திருநாள். ஆதீனப் பல்கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர், தருமையாதீனப்புலவர்,

சித்தாந்தக் கலைமணி, மகாவித்துவான், திரு. சி. அருணை வடிவேல் முதலியார் 'சிவஞானபோதம்' பற்றியும், ஆதீனப் பல்கலைக் கல்லூரிப் பொறுப்பு முதல்வர், திருநெறிச்செம்மல்' வித்துவான், திரு. சா. குருசாமி தேசிகர் 'சிவஞான சித்தியார், பற்றியும் சொற்பொழிவாற்றினர். மாயூரம் வீணை இசைச் செல்வன், மாஸ்டர். S. சந்திரசேகரன் குழுவினரின் வீணை இன்னிசை நடைபெற்றது. சிதம்பரம் டாக்டர். திரு. K, அரங்கசாமிப் பிள்ளை அவர்கள் வீணை வாசித்த மாஸ்டர். S. சந்திரசேகரனைப் பாராட்டி ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் அளித்த பொன்னாடையைப் போர்த்தி வாழ்த்தினார்கள்.

2—6—66 முதல் 10—6—66 முடிய அமுத மொழிக் கொண்டல், அருள் மொழி யரசு, திருமுருக. கிருபானந்த வாரியார் அவர்களின் தொடர்ச் சொற்பொழிவு நடைபெற்றது·

2—6—66 முதல் 4—6—66 முடிய பெரியபுராணத்திருநாள். சுந்தரர், அப்பர், ஞானசம்பந்தர் ஆகியோர்களின் விரிவுரை நடைபெற்றது.

5—6—66 முதல் 7—6—66 முடிய திருவிளையாடல் புராணத் திருநாள், மாணிக்கவாசகர், மீனாட்சியம்மை திருமணம், பிட்டுக்கு மண்சுமந்த திருவிளையாடல்பற்றி விரிவுரை நடைபெற்றது,

8—6—66 முதல் 10—6—66 முடிய சுந்தரர் திருநாள். முருகவேள் திருவவதாரம், சூரபன்மன் பெருவாழ்வு, வள்ளியம்மை திருமணம் பற்றி விரிவுரை நடைபெற்றது. 10—6—66 மாலை 6 மணிக்குப் புராண விரிவுரை நிறைவு விழா நடைபெற்றது.

**இன்னிசை :**

மாலை 8 மணி முதல் அண்ணாமலைப் பல்கலைக் கழக, இசைக் கல்லூரி முதல்வர், தருமையாதீன இசைப்புலவர், திருமுறைக் கலாநிதி, இசையரசு, திரு. M. M. தண்டபாணி தேசிகர் அவர்கள் குழுவினரின் இன்னிசை நடைபெற்றது.

**குருபூசை விழா :**

9—6—66 வியாழக்கிழமை ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளின் குருபூசை விழா நடைபெற்றது. காலை 10 மணி யளவில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்

சொக்கநாதப்பெருமானை வழிபட்டு ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருக்கோயிலுக்கு எழுந்தருளி விசேஷ அபிஷேக ஆராதனைகள் செய்வித்து வழிபாடியற்றியருளினார்கள்.

மாலை 6 மணி யளவில் எழுந்தருளி குருமூர்த்த வழிபாடியற்றி ஸ்ரீ துர்க்காம்பிகை திருக்கோயில், ஸ்ரீ தருமபுரீசுவரர் திருக்கோயில், ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில்களில், வழிபாடாற்றி திருமடத்திற்கு எழுந்தருளி சொக்கநாதப் பெருமானைத் தரிசித்துக் கொலுக்காட்சி வழங்கியருளினார்கள்.

**பட்டணப்பிரவேசத் திருநாள் :**

10—6—66 வெள்ளிக்கிழமை காலை சொக்கநாதப்பெருமானுக்கு விசேஷ வழிபாடுகள் நடைபெற்றன. பகல் 12 மணிக்கு மாகேஸ்வரபூசை நடைபெற்றது.

இரவு 9 மணி யளவில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் சிவிகையில் எழுந்தருளி மேள வாத்தியங்கள், பாண்டு வாத்தியங்கள் முழங்க அடியார்கள் புடைசூழ திருவீதிஉலா வந்து கொலுக்காட்சி வழங்கியருளினார்கள்.

**சித்தாந்தப் பாட வகுப்பு :**

31—5—66 முதல் 10—6—66 முடிய காலை 10 மணி முதல் "சிவஞானசித்தியார்" பாட வகுப்பு நடைபெற்றது. தருமையாதீனப் பல்கலைக் கல்லூரிச் சித்தாந்தப் பேராசிரியர், தருமையாதீனப் புலவர், சித்தாந்தக் கலைமணி, மகாவித்துவான், திரு. சி. அருணைவடிவேல் முதலியார் அவர்கள் விளக்க விரிவுரை நிகழ்த்தினார்கள்.

10—6—66 காலை 10 மணி அளவில் சித்தாந்தப் பாட வகுப்பு நிறைவு விழா நடைபெற்று, அமுதமொழிக் கொண்டல் திருமுருக. கிருபானந்த வாரியார் அவர்கள் சிறப்புரை வழங்கினார்கள்.

## வேளூரில் வசந்தோற்சவம்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்தில் வசந்தோற்சவம் 23—5—66 திங்கட்கிழமை முதல் தொடங்கி 1—6—66 புதன்கிழமை முடிய உள்ள நாட்களில் சிறப்பாக நடைபெற்றது. நாள்தோறும்

மாலை 6 மணிக்குமேல் சுவாமி புறப்பாடாகி பிராகாரத்தில் வலம் வந்து வசந்த மண்டபத்தில் ஊஞ்சல் உற்சவம் நடைபெற்றது. அன்பர்கள் வந்து வழிபட்டுய்ந்தனர்.

## ஆச்சாள்புரத்தில் திருஞானசம்பந்தர் ஐக்கியம்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத்தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் சைவ சமயாசாரியர் நால்வருள் ஒருவராகிய திருஞானசம்பந்தப் பெருமான் திருமணம் 4—6—66 சனிக்கிழமை நடைபெற்றது. பின்னர் வெள்ளிப் பல்லக்கில் திருவீதியுலாவும், சிவஜோதியிற் கலத்தலாகிய ஐக்கியமும் நடைபெற்றன.

மாலை 6 மணி முதல் தேவார வகுப்பு ஆண்டு விழா நடைபெற்றது. சிதம்பரம் இராமசாமிச் செட்டியார் உயர்பள்ளித் தலைமையாசிரியர், திரு. பு. ரா. சுவாமிநாதன் M. A., L. T., அவர்கள் "திருமணம்" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றி தேவார வகுப்பு மாணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினார்கள். விழாவில் அன்பர்கள் பலர் வந்து கலந்து கொண்டு தரிசித்தும் கேட்டும் மகிழ்ந்தனர்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Panchanathiswaraswami Devasthanam, Tiruvaiyaru

By the grace of God I was able to visit this famous shrine and offer my prayers. The shrine is kept in good condition.

(Sd.) R. Sadasivam,
Judge, High Court Madras.

27—3—66.

What else I can say but to respectfully congratulate His Holiness the Mahasannidhanam of Dharmapuram Mutt for maintaining this ancient temple in a very delightful manner which I am sure would thrill any devotee. May others follow this excellent work.

(Sd.) N. P. Seshadri,
Secy. National Cultural, New Delhi.

12—5—66.

# திருவாரூரில் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் அவதாரத் தலமாகிய திருவாமூரில் 16—4—1966 சனிக்கிழமை சதயத்தன்று ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜைவிழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பெற்றது. அதையொட்டி 14, 15, 16—4—1966 மூன்று நாட்களும் " அப்பர் தேவார அருந்தமிழ் மகாநாடும் ", " சிவபூஜகர் மகாநாடும் ", " தேவாரப் பண்ணாராய்ச்சி மகாநாடும் " சிறப்பாக நடைபெற்றன. முதல்நாள் காலை கணபதி ஹோமமும், இரண்டாம்நாள் நவக்கிரக ஹோமமும், மூன்றும்நாள் ஸ்ரீஅப்பர் சுவாமிகட்கு ஏகாதச ருத்ராபிஷேகமும் நடைபெற்றன. 16 4-66 குருபூஜை விழாவன்று மாலை தருமபுர ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமாசந்நிதானமவர்கள் திருவாமூருக்கு எருந்தருளி ஸ்ரீ அப்பர் சுவாமிகளுக்குப் பொன்னுடை சார்த்தி வழிபட்டார்கள், பழம்பெரும் ஓதுவாமூர்த்தியாகிய திருவிடைமருதூர் வித்துவான் திரு. மு. நடராஜ தேசிகர் அவர்கட்கு அப்பர் சுவாமிகள் குருபூஜை விழாக்கழகத்தின் சார்பில் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமவர்கள் " திருமுறைக் கலாநிதி " என்னும் சிறப்புப்பட்டம் பொறித்த பொற்பதக்கம் வழங்கி ரூ. 501—00 அடங்கிய பணமுடிப்பு அளித்துப் பொன்னுடை போர்த்தி ஆசி வழங்கி அருளினார்கள். பிரபல ஓதுமூர்த்திகள் பலரும், சிவபூஜா துரந்தரர் பலரும், அமைச்சர் பெருமக்களும், புலவர் பெருமக்களும், ஆகப் பலரும் பங்குகொண்டு சிறப்புற்றனர்.

14—4—1966 முதல் நாள் காலை திருப்பாம்புரம் சிவசுப்ரமணியம் சகோதரர்களின் மங்கள வாத்திய இசையுடன் மகாநாடு தொடங்கியது. பைந்தமிழ்ச் செல்வர் திரு. ச. சிவகுமாரன் வரவேற்புரை நிகழ்த்தினர். சென்னை சட்டமன்ற சபாநாயகர் கனம் திரு, எஸ். செல்லபாண்டியன் மகாநாட்டைத் தொடங்கி வைத்துப் பேசும்போது சமயமும், அரசியலும் ஒரு மனிதனின் இருகண்கள் போல்வன என்றும், கண்கள் இரண்டும் மனிதனுக்கு நல்லனவற்றைத் தேடித்தருவது போன்று சமயமும், அரசியலும் மனித இனத்துக்கு நன்மை விளைவிக்கவே பாடுபடுகின்றன என்றும் குறிப்பிட்டார்.

மாலை நிகழ்ச்சி திடுவாவடுதுறை திருமுறைப்பண்மணிகள் திரு. விசுவலிங்கம், சபாபதி சகோதரர்களின் பண்ணிசையரங்குடன் மாநாடு தொடங்கியது. ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் வாழ்த்துரை கூறினார்கள். தருமையாதீனப் புலவர்

திரு. க. வச்சிரவேல் முதலியார் "திருநேரிசை" பற்றியும், காஞ்சீபுரம் திரு. க. சம்பந்த முதலியார் "திருவிருத்தம்" பற்றியும். "திருக்கோயில்" ஆசிரியர் திரு. என். ஆர். முருவேள் "அப்பர் தேவாரப்பண்" பற்றியும் விரிவுரையாற்றினர்கள். சென்னை குமாரி, கௌரி குழுவினர் "திருநாவுக்கரசர்" பற்றி இன்னிசைக் கதா காலட்சேபம் நிகழ்த்தினர்.

15—1—66 இரண்டாம்நாள் காலை புதுவை மாநில முதலமைச்சர் கனம் திரு. வேங்கடசுப்பா ரெட்டியாரவர்கள் சிவ பூஜகர் மகாநாட்டைத் தொடக்கி வைத்தார்கள். திரு. எம். சுப்பிரமணிய முதலியார், திரு. பஞ்சாக்ஷரம் பிள்ளை முதலியோர் சிவபூஜைத் தத்துவம் பற்றி விளக்கவுரையாற்றினர்கள். சங்கீத பூஷணம் திரு. பி. சுவாமிநாதன், தேவார இசைமணி திரு. எஸ். திருஞானசம்பந்தம் குழுவினர் பண்ணிசையரங்குடன் மாலை நிகழ்ச்சி தொடங்கியது. புதுவை மாநில அபிவிருத்தி அமைச்சர் கனம் திரு. ப. சண்முகம் தலைமையுரை நிகழ்த்தினர். நிகழ்த்துகையில் அப்பர் பெருமான் ஆலய வளர்ச்சிக்குப் புதுவை மாநிலமும் தம்மாலியன்ற உதவிகளைக் காணிக்கையாக்கும் என்று குறிப்பிட்டார்.

தருமையாதீனப் பல்கலைக்கல்லூரிப் பொறுப்பு முதல்வர் திரு. வி. சா. குருசாமி தேசிகர் "அப்பர் சொல்லும் அறவுரை" பற்றியும், திருப்பனந்தாள் செந்தமிழ்க்கல்லூரி முதல்வர் திரு கே. எம். வேங்கடராமையா "அப்பரைப்பற்றிய கல்வெட்டுக்கள்" பற்றியும் விரிவுரையாற்றினர்கள். திருப்பனந்தாள் "திருமுறை ஆடல் மர்மணி" திரு எஸ். சட்டைநாத முதலியார் திருமுறைப் பாடல்களுக்கு ஆடிப்பாடி அகங்குழைய விள்க்கமளித்தார்.

16—4—66 மூன்ரும்நாள் காலை குருபூஜை விழாவன்று திருக்கடவூர் பிச்சக்கட்டளை எஸ்டேட் திரு. கே. கனகசபைப் பிள்ளையவர்கள் தொடக்கவுரையாற்றினர்கள். சென்னை மாநில செய்தித்துறை அமைச்சர் கனம் திரு. ஜி. பூவராகன் அவர்கள் தலைமை உரை நிகழ்த்தினர்கள். திருமுருக கிருபானந்த வாரியார் அவர்களின் இளவல் திரு. திருப்புகழ் மணி "ஒரு நாவுக்கு உரை செய்ய ஒண்ணுமை" பற்றியும், சிதம்பரம் திரு. ச. சேது சுப்பிரமணிய பிள்ளை "நற்றுணை" என்பது பற்றியும் விரிவுரையாற்றினர்கள். பகல் 12-30 மணிக்கு ஏகாதச ருத்ராபிஷேகம், லட்டுப் பாவாடையுடன் ஸ்ரீ அப்பர் சுவாமிகட்குச் சோடசோபசார தீபாராதனை குருபூஜை வழிபாடு நடைபெற்றது.

திருவாரூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் குருபூஜை விழாவில்
(15—4—66)



புதுவை மாநில முதல் அமைச்சர் கனம், ப. வேங்கடசுப்பா ரெட்டியார் அவர்கள் சிவபூஜகர் மகாநாட்டைத் தொடங்கிவைத்தல்.

திருவாரூர், ஸ்ரீ மாதினியார் சிவபூஜை நிலையத் திருப்பணிக்கு 12—4—66 இல் ரூ. 3225. நன்கொடை அளித்தல்



தென்னார்க்காடு மாவட்ட மாதர்சங்கப் பிரதிநிதிகளும், சென்னை மாநில மாதர்நலக் குழுத்தலைவி திருமதி சரோஜினி வீரப்பன் அவர்களும்.

மாலை நிகழ்ச்சி திரு. எம். சுப்பிரமணிய முதலியார், திருக்களர் திரு. தி. சுந்தரேச தேசிகர் குழுவினரின் பண்ணிசையரங்குடன் தொடங்கியது. தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ. கயிலைக் குருமகாசந்நிதானமவர்கள் மாலை 7—00 மணிக்கு எழுந்தருளினார்கள். ஊர் மக்களும், அறங்காவலர்களும், விழாக் கழகத்தினரும் பேரார்வத்துடன் பூர்ணகும்ப மரியாதையுடன் ஆலய முகப்பில் வரவேற்றார்கள். ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள் ஸ்ரீ அப்பர் சுவாமிகளையும், ஸ்ரீ திரிபுரசுந்தரி சமேத ஸ்ரீ பசுபதீசுவரரையும் முறையாக வழிபட்டார்கள். தருமையாதீனச் சார்பில் திருவாமூரில் ஏற்படுத்த முன்வந்துள்ள "ஸ்ரீ அப்பர் சுவாமிகள் தேவாரப் பாடசாலை" அறக்கட்டளை மூலதனம் ஒரு லக்ஷ ரூபாய்ப் பத்திரங்களை அப்பர் சந்நிதியில் வைத்து வழிபாடு நிகழ்த்தினார்கள். திருவிடைமருதூர் வித்துவான் திரு. மு. நடராஜ தேசிகர் அவர்கட்கும் குருபூஜை விழாக் கழகச் சார்பில் "திருமுறைக்கலாநிதி" என்னும் சிறப்புப் பட்டமும், பண முடிப்பும் வழங்கிப் பொன்னாடையைப் போர்த்தி, ஆசீர்வதித்தார்கள்.

திரு. மு. நடராஜ தேசிகர் அவர்கள் தமக்குக்கிடைத்த பெருமையைப் போற்றி நன்றி தெரிவித்துக் கொண்டார்கள். ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் ஸ்ரீ அப்பர் ,சுவாமிகள் ஆலய வளர்ச்சி பற்றியும், குருபூஜை கொண்டாடுவதன் அவசியம் பற்றியும், அப்பர் தேவார அருந்தமிழ் மகாநாடு, பண்ணாராய்ச்சி மகாநாடு, சிவபூஜகர் மகாநாடு நடத்த வேண்டுவதன் முக்கியத்துவம் பற்றியும் விளக்கினார்கள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்கள் '1,300 ஆண்டுகட்கு முன்னர் இத் திருவாமூரில் அவதரித்த அப்பர் பெருமானும், அதே காலத்தில் சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தரும் தான் நமது தமிழகத்தைப் பண்பாட்டு வகையிலும், நாட்டின் எல்லை வகையிலும் பர்துகாத்துக் கொடுத்தவர்கள். ஞானசம்பந்தரும் அப்பரும் அக்காலத்தில் நண்பர்களாய் இருந்தார்கள் என்பதற்குச் சான்றாக இன்றும் அப்பர் சந்நிதியில் 4 வயது சிறுவன் மழலை மொழியால் தேவாரம் பாடியது உணர்த்துகிறது. நமது ஆச்சாரியர்களிடத்தில் நாம் பக்தி செலுத்தினால்தான் நமது பண்பாடு உயரும். மனிதன் வாழ்வாங்கு வாழமுடியும். திருமுறையால் வாழ்வித்த அப்பர் பெருமான் குருபூஜை விழாவில் பழைய ஓதுவாமூர்த்தியாகிய நடராஜ தேசிகருக்கு திருமுறைக் கலாநிதி என்ற பட்டமளித்துப் பாராட்டுவது மிகவும் பொருத்தமானதே. செந்தமிழ்ச் சொக்கர் திருவருளால் நமது ஆதீனச் சார்பில் இங்கு, "ஸ்ரீ அப்பர் சுவாமிகள் தேவாரப்பாடசாலை" விரைவில் தொடங்க இருக்கிறது என்று அறிமுகம் செய்வித்து'

ஆசி வழங்கி அருளினார்கள். திரு. கே. கமலக்கண்ணன் எம். எல். சி. வரவேற்புரை நிகழ்த்தினார். தென்னார்க்காடு மாவட்ட ஆட்சித்துறைத்தலைவர் திரு. டி. வி. வாசுதேவன் எம். ஏ. தொடக்கவுரை நிகழ்த்தினார். நிகழ்த்துகையில் அப்பர், சுந்தரர் அவதரித்தமையால் இம்மாவட்டத்திற்கே தனிப்பெருமை கிடைத்துள்ளது என்று குறிப்பிட்டார்கள். சிதம்பரம் டாக்டர் திரு. கே. அரங்கசாமிப் பிள்ளை தலைமையுரை ஆற்றினார்கள். ஆற்றும் போது குருபக்தியின் அவசியத்தையும், தொண்டர்களின் பெருமையையும் விளக்கினார்கள். காவிரிப்பூம்பட்டினம் சிவராஜயோக மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ மாணிக்கவாசக ஞானதேசிக சுவாமிகள் வாழ்த்துரை கூறினார்கள். சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைத்தலைவர் திரு. மு. இராசாக்கண்ணனார் எம். ஏ. அப்பர் என்பது பற்றியும், திரு பி. ஆர். சுவாமிநாதன், எம். ஏ. எல், டி. அப்பூதி அடிகள் பற்றியும், அண்ணாமலைப் பல்கலைக்கழக ஆய்வாளர் திரு. க. வெள்ளைவாரணனார் திலகவதியார் பற்றியும் விரிவுரையாற்றினார்கள். திரு. ஆர். சுவாமிநாதன் குருபூஜை விழாக்கழகச் சார்பில் அனைவருக்கும் நன்றி தெரிவித்தார்.

சென்ற ஆண்டுக் குருபூஜை வரவு, செலவு அறிக்கை வாசிக்கப்பட்டு எல்லோருக்கும் வழங்கப்பட்டது. இரவு அப்பர் சுவாமிகள் வீதி உலாக்காட்சி தேவார பாராயணத்துடனும், மேளவாத்திய முழக்கத்துடனும் சிறப்பாக நடைபெற்றது. 3,000 மக்களுக்குமேல் குருபூஜை விழாவைத் தரிசித்தும் மகாநாட்டில் கலந்துகொண்டும் பயனடைந்தனர்.

## திருவாமூர் ஸ்ரீ மாதினியார் சிவபூஜை நிலையத்துக்கு நன்கொடை.

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் அவதாரத்தலமாகிய திருவாமூர் ஸ்ரீ திருநாவுக்கரசு நாயனார் திருக்கோயில் தென் பகுதியில் சுவாமிகளின் தாயார் ஸ்ரீ மாதினியார் பெயரால் கட்டப்பெற்று வரும் "ஸ்ரீ மாதினியார் சிவபூஜை நிலையம்" திருப்பணிக்கு நிதி உதவி அளித்த தென்னார்க்காடு 'மாவட்டம் மாதர் சங்கங்களின் விவரம் :-

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீமதி சரஸ்வதி லட்சுமிநாராயண ரெட்டியார் (மாவட்ட மாதர் நலக் குழுத்தலைவி ... | 2 | |
| 2 | திருவெண்ணெய்நல்லூர் வட்டார மாதர்சங்கங்கள் | 305 | 00 |
| 3 | வானூர் ,, ... | | 00 |

| | | | | ரூ. | பை. |
|---|---|---|---|---|---|
| 4 | நெல்லிக்குப்பம் | ,, | ... | 151 | 00 |
| 5 | பரங்கிப்பேட்டை | ,, | ... | 150 | 00 |
| 6 | உளுந்தூர்ப்பேட்டை | ,, | ... | 143 | 00 |
| 7 | பண்ணுருட்டி | ,, | ... | 140 | 00 |
| 8 | விருத்தாசலம் | ,, | ... | 133 | 00 |
| 9 | மயிலம் | ,, | ... | 112 | 00 |
| 10 | காட்டுமன்னார்கோவில் | ,, | ... | 106 | 00 |
| 11 | கோலியனூர் | ,, | ... | 105 | 00 |
| 12 | திருநாவலூர் | ,, | ... | 103 | 00 |
| 13 | விக்ரவாண்டி | ,, | ... | 100 | 00 |
| 14 | ஒலக்கர் | ,, | ... | 85 | 00 |
| 15 | சங்கராபுரம் | ,, | ... | 81 | 00 |
| 16 | கண்டமங்கலம் | ,, | ... | 80 | 00 |
| 17 | ரிஷிவந்தியம் | ,, | ... | 75 | 00 |
| 18 | நல்லூர் | ,, | ... | 71 | 00 |
| 19 | செஞ்சி | ,, | ... | 68 | 00 |
| 20 | மேல் மலையனூர் | ,, | ... | 50 | 00 |
| 21 | முகையூர் | ,, | ... | 50 | 00 |
| 22 | சின்னசேலம் | ,, | ... | 51 | 00 |
| 23 | மாதர் நல இலாக்கா கிளைகள் | | ... | 47 | 00 |
| 24 | கீரப்பாளையம் வட்டார மாதர் சங்கங்கள் | | ... | 40 | 00 |
| 25 | குமராட்சி | ,, | ... | 37 | 00 |
| 26 | திட்டக்குடி | ,, | ... | 31 | 00 |
| 27 | தியாகதுர்க்கம் | ,, | ... | 24 | 00 |
| 28 | மரக்காணம் | ,, | ... | 22 | 00 |
| 29 | கடலூர் | ,, | ... | 100 | 00 |
| 30 | குறிஞ்சிப்பாடி | ,, | ... | 100 | 00 |
| 31 | மேல் புவனகிரி | ,, | ... | 100 | 00 |
| 32 | திருக்கோவிலூர் | ,, | ... | 100 | 00 |
| 33 | கள்ளக்குறிச்சி | ,, | ... | 105 | 00 |
| 34 | காணை | ,, | ... | 76 | 00 |

| | | | | ரூ. | பை. |
|---|---|---|---|---|---|
| 35 | வல்லம் | ,, | ... | 58 | 00 |
| 36 | நொளம்பூர் | ,, | ... | 2 | 00 |
| | மொத்தத் தொகை ரூ. | | ... | 3,225 | 00 |

மேற்கண்ட விபரப்படிக்குள்ள ரூபாய் மூவாயிரத்து இரு நூற்றிருபத்தைந்தும் தென்னார்ககாடு மாவட்ட ஆட்சித்துறைத் தலைவர் திரு. டி. வி. வாசுதேவன் எம். ஏ., அவர்கள் தலைமையில் திருவாமூர் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் சந்நிதியில் நடைபெற்ற நிதியளிப்பு விழாவில் 12—4—1966 மாலை சென்னை ராஜ்ய மாதர் நலக்குழுத்தலைவி திருமதி சரோஜினிவரதப்பன் அவர்கள் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளிடம் அளித்தார்கள். சுவாமிகள் மேற்படி நிலயத் திருப்பணிக் கமிட்டியாரிடம் அளித்தார்கள்.



---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

### Sri Panchanathiswaraswami Devasthanam, Tiruvaiyaur

அறிவிப்பின்றி வந்தாலும், அன்பும் பரிவும் காட்டி ஆண்டவன் அம்மை வழிபாட்டிற்கு வகைசெய்த, திருவாளர் அ. சரவண முதலியார் அவர்கள் கோயில் ஆணையர்களுக்கெல்லாம் நல்ல வழிகாட்டி, சிறந்த முன்னோடி ஓதுவார் அவர்களின் சொல்லும் இசையும் உட்பொருளும் உள்ளத்தை ஈர்ப்பன. அன்பைக் கண்டேன். கோயில் உள்ளும் புறமும் தூய்மையும் தெய்வத் தன்மையும் மிளிரும் வண்ணம் அமைந்து இருப்பது பாராட்டிற்கு உரியது. இது ஒரு நல்ல இனிய அனுபவம்.

(Sd.) க. ச. லோகவிநாயகம் — பொறியியலாளர் — சென்னை.

[15—5—66]

கா, து. நடராசன் — செயலர் — சென்னை சட்டசபை.

# எதிர்காலம் - திரு. கே. முத்துஜோதிடர்

( பராபவஹூ ஆனிமீ 1உ முதல் 32உ முடிய )

( 15—6—66 முதல் 16—7—66 முடிய )

**1. மேஷம். அசுவதி - பரணி - கார்த்திகை ¼**

மேஷராசி ஒன்பது பாதங்களும் சுபத்தைத்தரும். லாப கரத்தோடு இடம்மாறல் ஏற்படும். ஸ்திர, சுகவாசம் ஏற்படும். மேலோர், பெரியோர் அன்புகிட்டும். தொழில் ஓங்கும். இல்லற சுகம் கிடைக்கும். புதன், வெள்ளி சுபமாகும்.

**2. ரிஷபம். கார்த்திகை ¾ - ரோஹிணி - மிருகசீரிஷம் ½**

ரிஷபராசி ஒன்பது பாதங்களும் மிச்சிரபலனைத் தரும். சஞ்சாரம் ஏற்படச்செய்யும். தொழில் ஓங்கும். நம்பினவர்களால் பூரண பலன் கிடைக்காது. நஷ்டமான பொருள் வந்து சேரும். ஸ்தாவர, ஜங்கம சொத்துக்கள் கிடைக்கும். வெள்ளியும், சனியும் சுபமாகும்.

**3. மிதுனம். மிருகசீரிஷம் ½ - திருவாதிரை - புனர்பூசம் ¾**

மிதுனராசி ஒன்பது பாதங்களும் மிச்சிர பலனைத்தரும் வியாதியால் அதிகத்துன்பம் ஏற்படச்செய்யும் குடும்பத்தொல்லை ஓங்கும். வரவுக்கு மிஞ்சின செலவு ஏற்படும். ஆனாலும் நண்பர் ஒருவரால் எதிர்பாராத லாபமும், உத்தியோக உயர்வும் ஏற்படச்செய்யும். அடிக்கடி சஞ்சாரம் அதிகமாகும். சனி, செவ்வாய் சுபமாகும்.

**4. கடகம். புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.**

கடகராசி ஒன்பது பாதங்களும் பூரணமான சுபத்தைத் தரும். வித்யை ஓங்கும். இடம் மாறலோடு மேல்பதவி கிடைக்கச்செய்யும். இல்லற சுகம் ஓங்கும். பூமி மூலத்தால்

விசேட லாபம் ஏற்படும். விவகாரம் ஜெயிக்கும். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

## 5. சிம்மம். மகம் - பூரம் - உத்திரம் ¼

சிம்மராசி ஒன்பது பாதங்களும் பூரண சுபத்தைத் தரும். விவாகாதி சுபங்கள் ஏற்படும். மேலோர், பெரியோர்களின் அன்பினால் அசாத்தியமெல்லாம் சுலபசாத்தியமாகும். நூதன வஸ்திர, ஆபரணச் சேர்க்கையும், இல்லற சுகமும் ஓங்கும், மனம் சந்தோஷமடையும். புதன், வெள்ளி சுபமாகும்.

## 6. கன்னி. உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½

கன்னியாராசி ஒன்பது பாதங்களும் சுப பலனையே தரும், ராஜாங்கமைத்திரமும், உயர் பதவிகளும், கிராம பூமிகளால் விசேட நன்மையும், தேவதா, குரு பக்தியும். நூதனமாக கைத் தொழில் விருத்தி செய்தலும் தானதரும பிரதிஷ்டா பலன் களும் ஏற்படும். ஆரோக்யம் உண்டாகும். தெய்வபலம் முன் நிற்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

## 7. துலாம். சித்திரை ½, - சுவாதி - விசாகம் ¾.

துலாராசி ஒன்பது பாதங்களும் மிஸ்ர பலனைத்தரும். ஆரோக்ய குறைவு காட்டும். வரவுக்கு மிஞ்சிய செலவுகள் ஏற்படும். விவாகாதி சுபங்கள் ஏற்படச்செய்யும். தெய்வ பலம் முன்னின்று காக்கும். தொழில் மூலமாக எதிர்பாராத லாபங்கள் தானாக வந்து சேரும். வியாதி சாந்தி ஏற்படும். ஸ்தாவர, ஜங்கம சொத்துக்கள் சேரும். விவகாரம் ஜெயிக்கும், அடிக்கடி சஞ்சாரம் ஏற்படும். புதன், வியாழன் சுபமாகும்.

## 8. விருச்சிகம். விசாகம் ¼-அனுஷம்-கேட்டை

விருச்சிகராசி ஒன்பது பாதங்களும் மிச்சிரபலனைத்தரும். விசாகம் நாலாம் பாதமும், அனுஷம் நாலு பாதமும் சுபமிராது. அதிகக்கவலைகளையும். நஷ்டங்களையும் உண்டுபண்ணும். கேட்டை நான்கு பாதங்களும் மகத்தான சுகத்தைத்தரும். புத்திராதிகளால் விசேட நன்மை உண்டாகும். ஆரோக்யம் தரும். இல்லறம் ஓங்கும். சனி, செவ்வாய் சுபமாகும்.

## 9. தனுசு. மூலம் - பூராடம் - உத்திராடம் ¼

தனுர்ராசி ஒன்பது பாதங்களும், மகத்தான சுகத்தைத் தரும். ஆடை, ஆபரணங்களும், கிரக சுகமும் ஓங்கும். சுப, சோபனாதிகளும் பந்துமித்திராளுடைய சேர்க்கையும் ஏற்படச் செய்யும். மேலோர், பெரியோர்களின் ஆசியும்கிட்டும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

## 10. மகரம். உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½

மகரராசி ஒன்பது பாதங்களும் சுபமேயாகும். உத்தி யோக உயர்வு ஏற்படும். தீராத வினைகள் எல்லாம் தீரும். ஆரோக்யம் உண்டாகும், இல்லற சுகம் ஓங்கும். மேலோர், பெரியோர்களின் அன்பு ஏற்படச்செய்யும் நூதன வியாபாரம் ஏற்படும். ஆடை, ஆபரணங்கள் சேரும். வியாழன், சனி சுபமாகும்,

## 11. கும்பம் - அவிட்டம் ½, சதயம் - பூரட்டாதி ¾.

கும்பராசி ஒன்பது பாதங்களும் மகாசந்தோஷத்தை உண்டுபண்ணும். பிரிந்துபோன தாம்பத்யம் சேரும். இல்லற சுகம் ஓங்கும். கிரக பூமி லாபங்கள் ஏற்படும். ஆரோக்யம் தரும். புதன், வெள்ளி சுபமாகும்.

## 12. மீனம். பூரட்டாதி ¼ உத்திரட்டாதி - ரேவதி.

மீனராசி ஒன்பது பாதங்களும் சுபமேயாகும். வித்யை விருத்தியாகும். மேல்பதவிகள் ஏற்படும். புத்திராதிகளால் விசேட லாபத்தைத்தரும். தெய்வபலம் முன்னின்று காக்கும். குடும்பம் ஓங்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

குறிப்பு: மேற்படி மாதம் பருவமழைகள் ஆங்காங்கு ஏற்படவேண்டிய இடங்களில் ஏற்பட்டு தென்னாடு செழிக்கும். தானிய விலைகள் குறையாது. உணவுப்பொருள்களின் தட்டி னால் ஜனங்கள் கஷ்டப்படுவார்கள். விந்தியோத்ர தேசங்களி லும், உத்பாதங்கள் உண்டாகி பிரஜைகள் கஷ்டப்படுவார்கள். துர்பிட்சத்தால் உலகம் தவிக்கும். இயற்கைகள் மாறச்செய் யும். எங்கெந்த தேசங்களில் துர்பிட்ச நிவாரண சாந்திகளும், மகாயக்ஞங்களும் நடக்கிறதோ, அங்கெல்லாம் ஜனங்கள் சுக மடைவார்கள். தெய்வபலம் காக்கும்.

உ

குருபாதம்

# தருமையாதீனம் திருஞானசம்பந்தர் ஆலயம்

## திருநெல்வேலி சந்திப்பு

ஞாயிறுதோறும் மாலை 6-30 மணி முதல் சொற்பொழிவு

12—6—66. வரம்பெறு படலம்

—திரு. ம. சிவசம்பு

,, திருநகரங்கண்ட படலம்

—திரு. வ. ச. நடராசபிள்ளை

19—6—66. சுக்கிரனுபதேசப் படலம்

—திரு. ம. சிவசம்பு

,, தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம்

—திரு வ. ச. நடராசபிள்ளை

26—6—66. அண்டகோசப் படலம்

—திரு. ம. சிவசம்பு

,, திருமணப் படலம்

—திரு. வ. ச. நடராசபிள்ளை

3—7—66. திக்குவிசயப் படலம்

—திரு. ம. சிவசம்பு

,, வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்

—திரு. வ. ச. நடராசபிள்ளை

10—7—66. எதிர்கொள் படலம்

—திரு. ம. சிவசம்பு

,, குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்

— திரு. வ. ச. நடராச பிள்ளை

வந்து கேட்டு இன்புறுக.

நெல்லை அருணகிரி
இசைக்கழகம்

இராம. கனகசபாபதி
அமைச்சர்.